# பாலியஸ்டர் துணிகள் விற்பனை விழா

## தில்லையாடி வள்ளியம்மை மாளிகை

பாந்தியன் சாலை, எழும்பூர், சென்னை-8

ஆயிரமாயிரம் அழகார்ந்த
பாலியஸ்டர் துணிகளை
ஆடவர், மகளிர், சிறுவர்கள்
விரும்பும் வண்ணங்களில்
தேர்ந்து எடுத்திட ஓர் அரிய வாய்ப்பு.

31-3-83 வரை நடைபெறும்

**20%**
தள்ளுபடியும் உண்டு



கோ-ஆப்டெக்ஸ்
கைத்தறி

# நான் ஏன் தோற்றேன்?



**தொடர்ந்து மூன்று வருஷங்களாக டேபிள் டென்னிஸில் தேசிய சாம்பியனாக இருந்து வந்த தமிழ்நாட்டுக் காரரான சந்திரசேகர் இந்தவருஷம் இறுதி ஆட்டம் வரை வந்து கடைசியில் கம்லேஷ் மேத்தாவிடம் தோற்றுவிட்டார். அவரைச் சென்னையிலுள்ள அவர் வீட்டில் சந்தித்தபோது....**

நிருபர்: உங்களைத் தோற்கடித்த கம்லேஷ் மேத்தா பற்றி?

சந்திரசேகர்: கம்லேஷ் மேத்தா நல்ல பிளேயர். நாங்கள் இருவரும் பத்து மேட்ச் ஆடினால் ஆறு-ஏழில் நான் ஜெயிப்பேன்.

நிருபர்: அப்படியென்றால் இந்த முறை எப்படித் தோற்றுப் போனீர்கள்?

ச. சேகர்: நான் இந்த வருடம் ஐந்தாவது முறையாய்த் தொடர்ந்து, பைனலில் ஆடினேன். முதல் வருடம் தோற்றேன். அடுத்த மூன்று வருடங்கள் நான்தான் சாம்பியன். நான்காவது தடவையும் எப்படியாவது டைட்டிலை அடைய வேண்டும் என்று எனக்கு ஒருவித வெறி. ஆடும் போது பயங்கர டென்ஷன். எனவே நன்கு கவனமாய் ஆடமுடியவில்லை.

நிருபர்: தேசிய டைட்டிலை எப்படியும் இந்த முறையாவது அடைந்துவிட வேண்டும் என்று கம்லேஷும்தானே டென்ஷனோடு ஆடியிருப்பார்?

ச. சேகர்: நீங்கள் சொல்வது தப்பு. நான் எப்படியும் அவரைத் தோற்கடிப்பேன் என்று அவரே எதிர்பார்த்தார். எனவே எந்தவித டென்ஷனும் இல்லாமல் ஆடி டைட்டிலைத் தட்டிக் கொண்டு போய் விட்டார். எல்லாவற்றுக்கும் மேல், யார் யார் தலையில் என்னென்ன எழுதியிருக்கிறதோ அதுதானே நடக்கும்?

நிருபர்: விளையாட்டில் திறமைதானே முக்கியம். நீங்கள் 'எல்லாம் அவரவர் தலையெழுத்து' என்கிறீர்கள்!

ச. சேகர்: இதற்குக் கொஞ்சம் விளக்கமாய்ப் பதில்சொல்கிறேன். குவார்ட்டர் ஃபைனலில் ஆடத் தகுதி பெறும் 8 பேரும் இரண்டு பிரிவாகி, லீக் ஆடி, ஒவ்வொரு பிரிவிலும் அதிக பாயிண்ட் எடுப்பவர்கள் இறுதி ஆட்டத்தில் மோத வேண்டும். நான் ஒரு பிரிவிலும் கம்லேஷ் இன்னொரு பிரிவிலும் ஆடினோம். கம்லேஷ் ஒரு ஆட்டக்காரரிடம் தோற்றபோது, ''கவலைப் படாதே! அடுத்த வருடம் பார்த்துக் கொள்வோம்'' என அவருக்கு நான் ஆறுதல் சொன்னேன். ஆனால் அதிருஷ்டவசமாய் மறுநாள் அவரே பைனலில் என்னோடு மோதினார். ஜெயித்துவிட்டார்! இதைத் தலையெழுத்து என்று சொல்லாமல் வேறு என்னவென்று சொல்வது?

நிருபர்: அடுத்த தடவையும் நேஷனல் சாம்பியன்ஷிப்புக்குப் போட்டி யிடுவீர்களா?

ச. சேகர்: அடுத்த வருடம் நேஷனல்ஸ் சென்னையில். சொந்த மண். நிச்சயம் ஆடுவேன். இருந்தாலும் எனக்கு காமன் வெல்த் சாம்பியன் ஆக வேண்டும் என்று ஆசை.

நிருபர்: நீங்கள் அதற்கு மிகக் கடுமையாகப் பயிற்சி செய்ய வேண்டும் அல்லவா?

ச. சேகர்: ஆமாம். விரைவில் ஜப்பானுக்குப் பயிற்சிக்காகப் போகிறேன்.

நிருபர்: ஜப்பானிய பயிற்சியில் அப்படி என்ன ஸ்பெஷாலிட்டி?

ச. சேகர்: ஜப்பானின் நெ. 1 ஆட்டக்காரர்கள் என் விஷயத்தில் மிக அக்கறை காட்டுகிறார்கள். வீடியோவில் எடுத்துப் போட்டுப் பார்க்கலாம். அப்போது நாம் எங்கே தப்புச் செய்கிறோம், எதிரியின் டெக்னிக் என்ன என்றெல்லாம் துல்லியமாய் அறியலாம்.

நிருபர்: காமன்வெல்த் டைட்டிலை அடையும் வரை தொடர்ந்து முயற்சி செய்து கொண்டே இருப்பீர்களா?

ச. சேகர்: வெற்றி பெற வேண்டும் என்பது என் ஆசை. ஆனாலும் இன்னும் 2 அல்லது 3 வருடங்களில் டேபிள் டென்னிஸ் ஆடுவதையே விட்டுவிடுவேன்.

நிருபர்: ஏன்?

ச. சேகர்: நம் அரசாங்கம் டேபிள் டென்னிஸ் பற்றிக் கவலைப்படுவது கிடையாது. டேபிள் டென்னிஸ் ஃபெடரேஷனுக்கோ பணவசதி கிடையாது. இந்தியாவில் டேபிள் டென்னிஸைத் தொழிலாக வைத்துக்கொண்டு பணம் சம்பாதிக்கமுடியாது.

நிருப்ர்: வேறு என்ன செய்வீர்கள்?

ச.சேகர்: நான் சட்டப் படிப்புப் படித்தவன். முழுநேர வக்கீலாகப் போகிறேன். (இப்போது சந்திரசேகர் இந்தியன் பாங்கில் ஆபீசர்.)

கொசுறு: சந்திரசேகர், டேபிள் டென்னிஸ் பற்றி ஸ்போர்ட்ஸ் ஸ்டார், ஸ்போர்ட்ஸ் வோர்ல்டு போன்ற பத்திரிகைகளில் நிறைய எழுதியிருக்கிறார். கல்கத்தாவிலிருந்து வெளிவரும் 'டெலிகிராஃப்' தினசரியில் மாதம் இரண்டு கட்டுரைகள் வீதம் இரண்டாண்டுகள் எழுத ஒப்புக் கொண்டிருக்கிறார். சன்மானம் மாதம் 1000 ரூபாய்! **பேட்டி: சந்திரமௌலி**

**புகைப்படம்: ஸ்ரீதர்.**

# துணுக்குத் தோரணம்!

மத்திய வயதை அடைந்தவர்களுக்குத் தொந்தி விழுவது இயற்கை. சாப்பாட்டைக் குறைத்துக் கொள்வதனால் தொந்தி அதிகம் கரைந்து விடாது. சில தேகப் பயிற்சிகள் இதற்காக விதிக்கப்பட்டுள்ளன. முழங்கால் மடியாமல் உடலை இடுப்பில் வளைத்து உள்ளங் கைகளினால் கால் விரல்களைத் தொடுவது ஒன்று. என்றாலும் 20 வயது இளைஞனைப் போல் ஒட்டிய வயிறு வருவதில்லை. காரணம் வயிற்றுத் தசைநார்கள் வயதினால் தங்கள் விரிந்து சுருங்கும் சக்தியை இழந்து விடுவது தான். மெலிதான ரப்பர் இழுத்து விட்டால் சுருங்கும். பழசாகிப்போன ரப்பர் சுருங்கும் தன்மை இழக்கும். அதுபோல.

இதற்குப் பரிகாரமாக ஒரு நவீன தேகப் பயிற்சியை வகுத்திருக்கிறார்கள். அவயவங்களை அசைக்காமல் செய்யப்படும் இந்தப் பயிற்சி ஐஸோ மெட்ரிக் எனப்படும். உறுப்புக்களை அசைப்பது தான் தேகப்பயிற்சியின் அடிப்படை என்பது மரபு. ஆனால் உறுப்புக்களின் வெளி அசைவை விட, தசைநார்களை ஒன்றுக்கொன்று விம்மி மோத விட்டுக் கொண்டால் அத்தசைநார்கள் வலுவடைந்து தங்கள் சுருங்கு சக்தியை இழக்காமல் இருக்கின்றன என்பது புதிய கண்டுபிடிப்பு. இதற்கு வகை செய்தது ஒரு தவளை.

ஒரு தவளையின் கால்களில் ஒன்றை இறுக்கக்கட்டி வைத்து விட்டார்கள். பயிற்சி இல்லாததால் அந்தக் கால் எவ்வளவு சீக்கிரம் பலஹீனமடைகிறது என்று கண்டுபிடிக்க. ஆனால் விஞ்ஞானி எதிர்பார்த்ததற்கு மாறாகக் கட்டப்பட்டிருந்த அந்தக் கால் மற்ற கால்களை விட வலுவடைந்து காணப்பட்டது. கட்டிலிருந்து விடுவித்துக் கொள்ள காலை அசைக்க முடியா விட்டாலும் தவளை உள்ளுக்குள்ளேயே கால் தசைநார்களால் கட்டுடன் போராடியதில் அந்தக்கால் வலுவடைந்தது. இதை அடிப்படையாகக் கொண்டு தான் ஐஸோமெட்ரிக் பயிற்சிகள் உருவாக்கப் பட்டிருக்கின்றன.

தகவல்: ''ரிஸர்ச் அண்ட் ரெஃபரன்ஸ்'



எல்லா இடங்களிலும் ரயில் நிலையங்களில் கைகாட்டி மரம் உண்டு. ஆனால் நீலகிரியில் ரயில் செல்லாத இடத்தில் கைகாட்டி மரம் ஒன்று உண்டு. அது மரமல்ல. ஓர் இடத்தின் பெயர்தான் கைகாட்டி மாம்! இதை Finger Post என்று ஆங்கிலத்தில் அழைக்கின்றனர்! மேலும் இரண்டு ஊர்களும் கைகாட்டி என்றே அழைக்கப்படுகிறது.

—எடப்பள்ளி ஒய். ஜே. ராஜு

டைரக்டர்: கிராமத்துப் பெண் டிரெஸ்ஸில் தயிர்க்காரியாக நடிக்க ஹீரோயின் மறுப்பதால்.....

படாதிபதி: என்ன செய்தீங்க?

டைரக்டர்: பேண்ட்-ஸ்லாக் அணிந்து ஸ்டாலில் இருந்தபடி லஸ்ஸி விற்கிற மாதிரி காட்சியை மாற்றி அமைச்சுட்டேன்!

—உ. ராஜாஜி



**ஆண்டு ஒன்றுக்குப் பதினாலாயிரம் கொலைகள்**

அமெரிக்காவில் 2.4 விநாடிகளுக்கு ஒரு குற்றம் நடைபெறுவதாக அதிகாரிகள் கூறுகின்றனர்.

ஐந்து விநாடிகளுக்கு ஒரு திருட்டு: ஐம்பத்தெட்டு விநாடிகளுக்கு ஒரு வழிப்பறி: ஆறு விநாடிகளுக்கு ஒரு கற்பழிப்பு: சென்ற ஆண்டில் மட்டும் இவற்றினால் ஏற்பட்ட பொருளாதார இழப்பு என்பது லட்சம் டாலர். இந்தக் கணக்குப்படி அமெரிக்காவில் ஆண்டு தோறும் பதினாலாயிரம் கொலைகளும், ஒரு லட்சத்து ஐம்பத்தேழாயிரம் தாக்குதல்களும், இரண்டு லட்சத்து இருபத்தோராயிரம் வழிப்பறிகளும் நடப்பதுடன், இரண்டு லட்சம் பேர்கள் காயப் படுத்தப்படுகின்றனர்.

—விஜயம்

கல்கி



1983 மார்ச் 20
துந்துபி பங்குனி 6
மலர் : 41 இதழ் : 34



# கூட்டுச்சேரா நாடுகளின் கூட்டணி!

அணிசேரா நாடுகள், கூட்டுச்சேரா நாடுகள், நடுநிலை நாடுகள், மண்டலச் சார்பற்ற நாடுகள் எனப் பலவிதமாக வர்ணிக்கப்படும் நாடுகளின் மகாநாடு தில்லியில் நடந்து கொண்டிருக்கிறது.

நேருஜியின் உள்ளத்தில் உதயமான கருத்து, நாஸர், டிட்டோவின் ஆமோதிப்பைப் பெற, 25 நாடுகளின் நல்லாதரவுடன் தொடங்கிய இயக்கம் கடந்த 22 ஆண்டுகளில் பல்கிப் பெருகி இன்று நூறு நாடுகள் அங்கம் வகிக்க, உலகின் மூன்றாவது பெரும் சக்தியாக மதிக்கப்படுகிறது.

பல்லிக்குப் பயந்த பிரதிநிதிகள், தடுப்பூசி போட்டுக்கொள்ள மறந்ததால் தனித்து வைக்கப்பட்ட பிரதிநிதிகள், ஹோட்டல்களில் தமக்கு ஆடம்பர வசதி போதாது என்று கோபப்பட்ட பிரதிநிதிகள் என்று பல்வேறு தேசங்களைச் சேர்ந்த பலதரப்பட்டவரும் கூடி இம் மாநாட்டில் முக்கிய உலகப் பிரச்னைகளை விவாதிக்கின்றனர்.

இந்திரா காந்தியைக் கட்டி அணைத்த காஸ்ட்ரோ, காஷ்மீரப் பிரச்னையை எழுப்பிச் சங்கடத்தில் ஆழ்த்திய ஜியா, ஐ. நா.சபையே அங்கீகரித்துள்ளபோது ஜனநாயக கம்பூசியாவின் கூட்டணி அரசை ஏன் இம்மாநாடு புறக்கணிக்கவேண்டும் என்று வன்மையாக வினவிய மலேசியா, இந்தோனேஷியா, சிங்கப்பூர் பிரதிநிதிகள் போன்ற பலர் மாநாட்டுக்குக் கலகலப்பையும் பரபரப்பையும் ஊட்டியுள்ளனர்.

கூட்டுச்சேரா நாடுகள் என்ற தத்துவத்தை வடித்துத் தந்த நேருஜி சொன்னார்: ''சுதந்திரம் முக்கியமானது: அதே அளவுக்கு அமைதியும் முக்கியமானதே. வல்லரசுகளின் அணு ஆயுதப் போட்டி காரணமாக எல்லாவற்றையும் நாம் இழக்க நேரிடும்போது சுதந்திரம் அர்த்தமற்றதாகிறது.'' கூட்டுச்சேரா நாடுகளின் லட்சியங்களையும் அவர் பட்டியல் போட்டார்: ஏகாதிபத்தியம், காலனி ஆதிக்கம், நிறபேதம், இனபேதம், ஆக்கிரமிப்பு, மேலாதிக்கம், பிற நாடுகளின் விவகாரங்களில் தலையிடுதல், உலகைப் பல பிரிவுகளாக்க முயலுதல் போன்றவற்றை எதிர்ப்பது. மேற்படி அநீதிகள் அரசியல் ரீதியாகவோ, பொருளாதார ரீதியாகவோ ராணுவ உதவியுடனோ, கலாசார ரீதியாகவோ எந்தவிதமாக நடந்தாலும் எதிர்ப்பது.

இந்தத் தத்துவங்களை ஏற்காத பல நாடுகளும் இன்று கூட்டுச்









சேரா நாடுகளின் இயக்கத்தில் அங்கம் வகிக்க அனுமதிக்கப்பட்டுள்ளன. இவற்றுள் சில, தாம் சார்ந்துள்ள வல்லரசு பக்கமாக இயக்கத்தையே ஈர்க்கப் பார்க்கின்றன! ருஷ்யாவுடன் கொஞ்சிக் குலவும் கியூபாவையும் அமெரிக்காவிடம் கெஞ்சிக் கூத்தாடி யுத்த தளவாடங்களைப் பெறும் பாகிஸ்தானையும் ரஷ்ய மேலாதிக்கத்தை ஏற்றுள்ள இன்றைய ஆப்கன் அரசையும் இவை போன்ற வேறு பல தேசங்களையும் மண்டலச் சார் பற்றவை என்று எவ்வாறு கருத முடியும்?

இத்தகைய முரண்பாடுகள் பல இருப்பினும் நம் பிரதமர் இந்திரா காந்தியின் தலைமையை ஏற்றதன் மூலம் பாரதத்துக்குப் பெருமை சேர்த் துள்ள இம்மாநாடு உலக அமைதிக்கு உழைக்க முடியும். அணு ஆயுதத் தயாரிப்பு, சோதனைகளை உடனடியாக நிறுத்தக் கோரிக்கை; வல்லரசு களின் ஆயுதப் போட்டி காரணமாக விரயமாகும் கணக்கற்ற செல் வத்தை மானுட நலனுக்கு ஆக்க பூர்வமாகப் பயன்படுத்த வேண்டுகோள்; இந்துமாக்கடல் அமைதிப் பிரதேசமாக வேண்டும், அங்கு ராணுவத் தளங்கள் கூடாது என்ற கண்டிப்பு போன்றவற்றை வல்லரசுகள் எளிதில் அலட்சியப்படுத்திவிட முடியாது. மானுட சமுதாயத்தின் பெரும் பான்மைக் குரல் நீதி கோரி ஒருசேர ஒலிக்கும்போது அதற்குத் தார்மீக பலமும் பலனும் இல்லாது போகாது.

---

**தமிழ்த்திரு நாடு தன்னைப் பெற்ற எங்கள்**
**தாயென்று கும்பிடடி பாப்பா -பாரதியார்**

# இரும்பு குதிரைகள்

## அத்தியாயம் 10

ஆனுல் எவ்வளவு நேரம் வெட்ட வெளியைப் பார்த்துக் கொண்டு மனசுக்குள் கவிதை நெய்ய முடியும்? ஊமை வெயிலாக இருந்தும் ஊர் முழுக்க ஒரு காந்தல் பரவியிருக்கிறது. மரம் ஆடாத, இலே அசங்காத, காற்றும் தூங்கிப்போன பகல் பொழுது. ஹிம்சையாய் இருக்கிறது. கபூர் சின்ன அசைவு கூட இல்லாமல் தூங்குகிருன்.

யார் கூடவாவது பேச வேண்டும் போல் இருக்கிறது. மெல்ல நூறு அடி தூரம் நடந்து செக் போஸ்ட் ஆட்களோடு பேசலாம். ஆனுல் அவர்களுக்கு இவனோடு வெறுமே பேசுவதை விட சுவாரஸ்யமான காரியங்கள் இருந்தன. லாரி நம்பரைக் கண்டதும் ஓட்டுபவன் பேரைச் சொல்லும் அளவுக்கு ஸ்நேகிதம் இருந்தது. தான் பேசாது போனுலும் பேசுவதைக் கேட்கலாமே என்று தோன்றிற்று.

''என்னடா தம்பிராஜு இன்வாய்ஸ் வெச்சிருக்கியா?''

தம்பிராஜாகப்பட்டவன் கத்தைச் சுருள் பேப்பர்களை மேஜையில் வைத்துவிட்டு உஸ்ஸென்று உட்கார்ந்தான்.

''அடடே சார், தம்பிராஜு இந்தத் தடவை இன்வாய்ஸ் கொணுந்திருக்கான்.''

''எங்க பொறுக்கியாந்தான் கேளு.''

''சதாய்க்காத சார். சீலு போடு.'' தம்பிராஜு முகத்தை மும்முரமாய் வைத்துக் கொண்டான்.

''சீலு எங்கடா போடணும்?''

''எங்கனப் போடு.''

சொத்தென்று இங்க் பேடில் தோய்த்து ஒரு முத்திரை தம்பிராஜு கன்னத்தில் குத்தினுர்கள். ''ரைட் குத்தியாச்சு. நீ போகலாம்.''

''நெசமாத்தானு?'' தம்பிராஜு விழி விரியக் கேட்டான்.

ஓவென்று எல்லாரும் சிரித்தார்கள்.

''ஒன்னே நம்பி ஒருத்தன் வண்டி குடுத்திருக்கானே அவனைச் சொல்லணும்.''

''ஏன் எனக்கென்ன கேடு?''

மறுபடி ஓவென்று சிரித்தார்கள்.

ஆந்திரால குப்பை வண்டி ஓட்டிக்கிட்டிருந்தான் சார். திடும்னு ஹைரோடு லாரி ஓட்ட ஆசை வந்துடுச்சு. எவங்கிட்டயோ பொய் புளுகி லாரி ஏறிட்டான். அரை லோடு கால் லோடா வண்டி மொத்தமும் சாமான். இளநி, அரிசி மூட்டை, எண்ணெய் டின். அங்கங்க பேரம் பேசி ஓவர் லோடு வேற. இங்க வந்து மாட்டிக்கினுரு. பேப்பரை எட்ரானு. தினத்தந்தி பேப்பரை எடுத்து நீட்றுனே பார்ப்பம். என்னடா நாலு வருஷம் இருக்குமா இது நடந்து?''

செக் போஸ்டில் உள்ளவன் தானுய் விஸ்வநாதனிடம் பேசினுன். தம்பிராஜு அந்தப் பேச்சைக் கேட்டு வெட்கப்படுவதா பெருமைப்படுவதா என்று தெரியாமல் உட்கார்ந்திருந்தான்.

''ரெண்டு நாள் மடக்கிப் போட்டுட்டம். அழுகையான அழுகை. ஒரே புலம்பல். ச்சே போன்னு வுட்டுட்டம். அடுத்த தடவை கைகொள்ளாத ரசீது. லாண்டரிபில், ஓட்டல் பில் எல்லாம் போட்டு தச்சிருக்குது. என்னடான்னு கேட்டா மறுநாள் போட்டுக்க சட்டை வேட்டி பொட்டில இருக்குதாம். செக் போஸ்ட்ல பில் கேட்டா? எடுத்தாந்துட்டான். ஓட்டல் பில் எதுக்குடான்னேம். எதுன்னு கொறைஞ்சா இதுவச்சு சமாளிக்கலாம்னு நினைச்சானும். சிரிக்கச் சிரிக்க வயிறு கிளிஞ்சு போச்சு சார். எப்படா தம்பிராஜு வருவான்னு காத்துக்கிட்டுக் கிடப்பம். வந்தா ரெண்டு



மணி நேரம் மடக்கிடுவோம். செமத்தியாப் பொளுது போவும்.''

''இன்னொரு கதை தெரியுமா?'' வேறொருவன் முன்வந்து பேசினன். தம்பிராஜு பொண்டாட்டி மெட்ராஸ் பார்க்கணும்னு சொல்லிச்சாம். கூட்டிக்கினு போறதா வேணுமான்னு ஒரே யோசனை. பொண்டாட்டியை லாரிலே கூட்டிக்கினு போறு பில் இருக்குதான்னு செக் போஸ்ட்காரன் கேட்டா?'' மறுபடி வெடிச் சிரிப்பு.

''அதெல்லாமில்ல. இனிமே தகிரியம் வந்திருச்சு. நீதான் தம்பிராஜு கன்னத்தில முத்திரை குத்திட்டியே. செக் போஸ்ட்ல மொள்ளத்தான் குத்துவான் போலாம்னு தீர்மானம் பண்ணிட்டான். . என்ன தம்பிராஜு சரிதானே?'' கூரை அதிர்ந்தது. விஸ்வநாதன் முகத்தைத் திருப்பிக் கொண்டு மெல்லச் சிரித்தான்.

''யார் யாரோ லாரி ஓட்ட வந்துட்ருங்க சார். தூக்கம் முழிச்சாப் போறும். வலுவு இருந்தாப்போறும். நல்ல துட்டு இதுலன்னு நெனைச்சு வந்துட்ருங்க. எதுக்கு செக் போஸ்ட், என்ன கேப்பான், எது காட்டணும்னு தெரிஞ்ச டிரைவர் நூத்துக்கு நாப்பது பேர்தான். மத்த ஆளுங்களோட மல்லாட்டம்தான். பேஜார் வேலை லார் இது. சார், தம்பிராஜு பேப்பர் சரியா இருக்குது. அனுப்பிச்சிருட்டுமா?''

''அதுக்குள்ளியா. தம்பிராஜு அந்த மூலக்கடை கதை சொல்லு.''

''அவன் சொல்ல மாட்டான் சார். நான் சொல்றேன். அப்ப—சாராயக் கடை தொறக்காத நேரம். புத்தூர் தாண்டினதும் மெட்ராஸ் சரக்கு வைக்க லாரில எடம் இருக்கான்னு கேட்டாங்க. அதுக்குத்தானே வண்டி ஓட்றேன். என்ன சரக்குன்னு கேட்டான். தேங்காய் டின்னுன்னு சொல்லி இருபது டப்பா ஏத்திட்டானுங்க. துட்டும் குடுத்தாச்சு. பாதித் தொலைவு போனதும் தம்பிராஜுக்கு டக்குன்னு ஞாபகம் வந்துது. அடடா ரெண்டு நாளா தலைக்கு எண்ணெயே வைக்கல்லியேன்னு இருட்ல வண்டிய நிறுத்தி பின் பக்கம் போய் ஒரு டின்னு சீலு ஒடைச்சு ரெண்டுகை அள்ளி வச்சு பரபரன்னு தேய்ச்சுக்குன்னு பக்குன்னு புடிச்சுது நாத்தம்.



மொத்தமும் சாராய டின்னு. பயந்து போய் எடுத்து ரோட்டோரம் அடுக்கிட்டு ஒரே புடி. மூலக்கடை. அங்கப் போனு மடக்கிட்டானுங்க. எங்கடா டின்னுன்னு கேட்டானுங்க. தேங்காண்ணெய்ன்னு சாராயம் ஏத்திட்டான். பார் என் தலையெல்லாம் ஒளுவுது. எடுத்து ரோட்ல அடுக்கிட்டு வந்துட்டேன்னுனும்.' பொத்துப் பொத்துன்னு போட்டுப் பொரட்டிட்டு ஒடிட்டானுங்க. வாயெல்லாம் ரத்தம். அன்னி லேர்ந்து எவன் டின்னு ஏத்தினுலும் தம்பிராஜு மோந்து பார்த்துட்டுத் தான்வண்டில வைக்க வுடுவான்.''

ஒவ்வொரு கதைக்கும் குடல் அறுந்துதான் போயிற்று.

மர பெஞ்சில் தம்பிராஜு குத்துக்காலிட்டு இந்தச் சிரிப்புக்கும் தனக்கும் சம்பந்தமில்லாதது போல் உட்கார்ந்திருந்தான்.

''சார் யாரு, சரக்கு ஏத்தனுமா?'' தம்பி ராஜு விஸ்வநாதனை நெருங்கிப் பேசினுன்.

''இல்லே. வண்டி காணும். தேடறேன்.''

''என்ன வண்டி, சார்?''

''காந்தி லால் டிரான்ஸ்போர்ட்.''

''அடடே! டின்னு லோடா!''

''பார்த்தியா?''

''தாங்கருனே.''

''எங்க?''

''கீழ்த் திருப்பதில. இன்னேரம் இளம் பிட்டிருப்பான்.. காலேல பேசிக்கிட்டிருந்தோம். உடம்புக்கு முடியலேன்னு சொன்னுன். சரக்கு மாத்திக்கிட்டுமான்னு கேட்டேன். வானுன்னுட்டான்.''

''இடம் சரியாச் சொல்லு.''

''எப்படிப் போவே.''

''காந்தி'' பார்க்கப் போனேன். தியேட்டரில் எண்ணி முப்பது பேருக்கு மேல் இல்லே. வெளியேவந்து தியேட்டர் உரிமையாளரை ''ஏன் இன்னும் படத்தை ஓட்டிக் கொண்டிருக்கிறீர்கள்?'' என்று கேட்டேன். ''தேசத் தந்தை பற்றிய இத்தனே உயர்வான படத்தை ஒரிரு வாரங்களோடு டப்பாவில் அடைக்க மனம் வரவில்லே'' என்ருர். நமது மக்களின் ரசனே இந்த அளவில் இருக்கிறது. நாம் எங்கே போய்க் கொண்டிருக்கிறேம்?

—ஹிந்துஸ்தான் டைம்ஸில் குஷ்வந்த் சிங் கவலே!



''கார் இருக்குது.''

''அப்பப் போவாதே. இங்கியே இரு.. ராத்திரி ஏழு எட்டு மணிக்கு இந்த எடம் தாண்டுவான். மடக்கிடலாம். நீ அங்க போய் அவன் ஆப்டாத ராவுல லோல்படப் போற. இது தாண்டித்தான் போவணும். செக்போஸ்ட்ல சொல்லிடு.மடக்கிடுவாங்க.''

''தாங்க்ஸ் தம்பிராஜு.''

''அட பரவால்லீங்க.''

''ரொம்பக் கலாட்டாப் பண்ருங்க உன்னே''

''பைத்தியக்காரன்னு நினேச்சுக்கிட்டிருக்கானுங்க. இவனுங்க மாதிரி பத்துப் பைத்தியக்காரன் பார்த்தவன் நான். வந்தப் புதுசுல ஒண்ணும் தெரியாத இருந்தா எப்பவும் அப்படியேவா இருந்துடுவான். மொறைக்கிறத விட முழிக்கிறது நல்லதுன்னு சும்மா இருக்கேன்.''

''நிஜமாவா?''

''ஒரு நா ஒரே இடில மொத்தமும் பேத்துட்டுப் போயிடப் போறேன். அன்னிக்குத் தெரியும் தம்பிராஜு யாருன்னு.''

''ச்சே ச்சே வாணும்பா.''

''மொள்ளக் குத்தறதாம். டேய் இருங்கடா ஒரு நா இல்லேன்னு ஒரு நா....''

சட்டென்று இறுகி ரௌத்திரகாரமான முகம். ஆச்சரியமாய் இருந்தது. என்ன அற்புதமான அப்பாவி வேடம். எல்லாக் கேலிக்கும் சலனமற்றிருந்த முகம்.

கபூரை எழுப்பி நடந்ததைச் சொன்னுன். மெல்ல இருள் கவ்விய குளிர் காற்று வீசிற்று. லாரி வரவில்லே.

''என்னுங்கோ மணி என்னு?'' பெண் குரல் கேட்டது.

''எட்டு பத்து.''

''வண்டி ஓடலேயா?''

''ம்ம்ம்'' தலே நிமிர்த்திப் பார்த்தான். க்யூடெக்ஸ் போட்ட நீண்ட நகங்கள், கார் உள் விளக்கில் மின்னின. கதவு விளிம்பைப் பற்றிக் கொண்டிருந்தன.

''ச்சு அப்பால போம்மா.'' கபூர் அதட்டினுன்.

''ம்... போவாட்டி என்ன செய்வியாம்?''

''அடி செருப்பால. போன்னு சொல்றேன்ல.''

''கபூர் என்ன இது!''

''உனக்குத் தெரியாது சார். சும்மா இருங்க. போ அந்தப் பக்கம்.''

''ஐய்ய பெரிய பிஸ்தா இவுரு.''

''த்தே பார் உதைப்படப் போற நீ.''

''கபூர்!''

''இது லோல் சார். பாத்தாத் தெரியலே. ஏம்மா உனக்கு ஆளா இடைக்கல. போ அப்பாலே.''

''நான் உன்னியா கூப்பிட்டேன்.சாரோடதானே பேசிக்கிட்டு இருக்கேன்.இல்ல சார்?''

விஸ்வநாதன் ஆச்சரியத்துடன் அவளேப் பார்த்தான். ஹைவே க்வீன். நெடுஞ்சாலே ராணி. பாதையோரப் பட்டிப்பூ.

''சார் உத்துப் பாக்குரு. நீ என்னவோ விரட்றே. இல்ல சார், நா உள்ள வரட்டா?''

''எதுக்கு?''

''எதுன்னு சாப்டக் குடேன். பசிக்குது.''


புதிய
தொடர்கதை
நேசமுள்ள
வான்சுடரே!
சவீதா
கல்கி 17-4-83
புத்தாண்டு
மலரில்
ஆரம்பம்

மணிமேகலைப் பிரசுரத்தின்
பக்தி நூல்கள்

# சந்தியா வந்தனம் செய்வது எப்படி?




| | ரூ.ப்பை |
|---|---|
| சந்தியாவந்தனம் செய்வது எப்படி? | 5-25 |
| கந்த புராணம் (ஓவியர் வினு வரைந்த முகப்புடன்) | 23-00 |
| அனுமார் புராணம் | 9-90 |
| பக்த விஜயம் | 11-50 |
| கீதை காட்டும் பாதை | 11-90 |
| மதமும் மன அமைதியும் | 3-50 |
| பிறந்த பயனை நாம் பெற வேண்டாமா? | 3-50 |

**இதர நூல்கள் :**

| | |
|---|---|
| பிரபலமானவர்களின் விலாசங்கள் | 15-00 |
| கிரிமினல் சட்டம் | 14-50 |
| சிவில் சட்டம் | 11-50 |
| ஜெனரல் நாலெட்ஜ் | 15-00 |
| கனவுகளுக்குப் பலன் | 14-00 |
| கராத்தே கற்றுக் கொள்ளுங்கள் பாகம் I | 7-50 |
| பரீட்சையில் பாஸ் செய்வது எப்படி? | 3-90 |
| சுயமாக தொழில் தொடங்க வழிகள் | 10-00 |
| தமிழ் மூலம் ஆங்கில இலக்கணம் | 15-00 |
| ஆங்கில—ஆங்கில—தமிழ் அகராதி | 24-00 |
| யோகாசனம் கற்றுக் கொள்ளுங்கள் | 8-00 |
| கைரேகை சாஸ்திரம் (250 படங்கள்) | 24-00 |

மேற்கண்ட புத்தகங்களுள் தேவையான வற்றை வி.பி.பி.யில் பெற எங்களுக்குக் கடிதம் எழுதுங்கள். பாதுகாப்பாக அனுப்பி வைக்கிறோம். தபால்காரர் வி.பி.பி. புத்தகப் பாக்கெட்டைக் கையில் தரும்போது அவரிடம் பணத்தைச் செலுத்தி விடலாம்.

## மணிமேகலைப் பிரசுரம்

தபால் பெட்டி எண் : 1447
4, தணிகாசலம் செட்டி ரோடு,
தியாகராய நகர், சென்னை-600 017

சிறந்த ஆயுர்வேத
மருந்துகளுக்கு

# லலிதா பார்மஸி

ஸ்தாபிதம் : 1942
தலைமை ஆபீஸ் :
கும்பகோணம் - 612001
(தமிழ்நாடு)
(போன் : 123)
டிரக் லைசென்ஸ் நெ. 40/31-8-78
சட்டுத் தொகைக்கு மத்திய அரசாங்கத்தால் அங்கீகரிக்கப்பட்டுள்ளது

உங்களுக்குத் தேவையான
ஆயுர்வேத மருந்துகள் யாவும் கிடைக்கும்

எமது விசேஷ தயாரிப்புகள் :

**மிகச் சிறந்த டானிக்**

1. யௌவரீ
2. பூர்ண சந்த்ரோதயம்
3. பனஜா
4. அச்வகந்தி தைலம்

எமது பிராஞ்சுகள் :

1. லலிதா பார்மஸி, 52-A, மஹாதானத் தெரு, மாயூரம்-609 001 போன் : 379
2. லலிதா பார்மஸி, 81, வடக்கு வீதி, சிதம்பரம்-608 001
3. லலிதா பார்மஸி, 39, ரங்கநாதன் தெரு, தி. நகர், சென்னை-600 017 போன் : 441454
4. லலிதா பார்மஸி, 105, கச்சேரி ரோடு, மயிலாப்பூர், சென்னை-600 004 போன் : 73007

உங்கள் உபாதைகளுக்கு டாக்டர் V.R.L. சர்மா அவர்களிடம் நேரிலோ அல்லது பதிலுக்கு (50Np தபால் தலை அனுப்பி) கடிதம் மூலமோ தலைமை ஆபீசுடன் தொடர்பு கொள்ளவும். கடிதங்களை தமிழில் அல்லது இங்கிலீஷில் Type செய்தோ அல்லது மிகத் தெளிவாகவோ எழுதக் கோருகிறோம். கடிதங்களிலும் முக்கியமாய் கார்டிலும் ரொம்பவும் நுணுக்கமாய் எழுத வேண்டாம் எனக் கூறுகிறோம். **"தெளிவில்லாமலும், பதிலுக்கு 50Np ஸ்டாம்ப் அனுப்பாமலும் வரும் கடிதங்களுக்கு பதில் எழுதப்பட மாட்டாது."**

விஸ்வநாதன் ஒரு பச்சை வாழைப் பழத்தை எடுத்துக் கொடுத்தான். உரித்து ஒரு விள்ளல் விழுங்கினுள்.

''உன் பேரு என்னு?''

''விஸ்வநாதன்.''

''தமிளு ஆளா?''

''ஆமா.''

''எம் பேரு கேக்கலேயே.''

''உன் பேர் என்ன?''

''வசந்தா. பேரு நல்லா இல்லே?'' கதவு விளிம்பில் மார்பை அழுத்தியபடி கண் சிமிட்டினுள்.

''சேலே மூடும் இளஞ்சோலே
மாலே சூடும் மலர் மாலே''

மாலேப் பொழுது மட்டுமே சூடிக்கொள் கிற மலர்மாலே. விடியலும் பகலும் வெறுக் கிற பூ. ஒருவேளே இவளுக்குத்தான் இந்த வரிகள் பொருத்தமோ?

''இருபது நிலவுகள்
நகமெங்கும் ஒளிவிடும்''

''ஆ நீ நல்லாப் பாடறியே.''

''நீ பாடுவியா?''

''அன்னுண்ட வாங்க போயிடலாம். கார்ல வேணம்.''

''வேணுமா சார்!'' கபூர் கேட்டான்.

''வண்டியை மிஸ்பண்ணி விடப்போறேம் கபூர்.''

''நான் பாத்துக்குறேன் சார். ஏய் இங்க வா... எவ்ளோ?'' குசுகுசுவென்று பேசி ஞர்கள்.

''நீங்க போயிட்டு வாங்க சார். ஒரு பைசா குடுக்காதீங்க. இங்க வந்ததும் நான் பேசிக்கிறேன். ஏய் இந்த ஆபீசர் சரி இல் லேண்டா ஒரு பைசா தர மாட்டேன்.''

அவள் உதடு சுழித்துச் சிரித்துவிட்டுப் பாதையோரம் இறங்கிப் போனுள். சற்றுத் தொலேவில் இருட்டில் நின்று விஸ்வநாதனுக் காகக் காத்திருந்தாள்.

''வெறுமனே பேசத்தான் போறேன் கபூர். இந்த மாதிரி ஆளுங்கக் கூடப் பேசினதில்லே.''

பனிச்சென்று லாரி வெளிச்சம் அடித்தது. பூசின உடம்பு. கற்றைத் தலேமுடி. ஒற் றைப் பின்னல். கதம்பம். காது ஜிமிக்கி. பெரிய செந்தூரம். வெள்ளேப் பற்கள். செதுக் கின முகவாய். கருகமணி. லாரி தாண்டிப் போயிற்று. இருட்டு தடித்தது.

''காமன் கோவில் சிறைவாசம்
காலே எழுந்தால் பரிகாசம்
தழுவிடும் பொழுதிலே
இடம் மாறும் இதயமே...''

''ஐய்யோல், என்னு நல்லாப் பாடற நீ. புதுப் படமா?''

''நீ படம் பார்ப்பியா?''

''தெலுங்குப் படம் பாப்பேன். இப்பப் பாடினத மறுபடி பாடேன். நல்லாப் பாடற.'' உட்கார்ந்து கொண் டார்கள். இருளில் தொலே தூரத்து வெளிச் சம் பின்புலமாக இருக்க, வடிவமைப்பு மட் டும் தெளிவாகத் தெரிய மறுபடி அவளே உற்றுப் பார்த்தான். இரண்டு கைகளே விரித்துக் கட்டை விரலே இணைத்து அவள் வலப்பக்க முகத்தைப் பார்த்தான்.



## இடதுகை சோசலிசம்

இந்திய விவசாய ஆராய்ச்சிக் கழகத் தில் நடந்த பட்டமளிப்பு விழாவுக்குச் சிறப்பு விருந்தினராக வந்திருந்தார் மக்கள் சபைத்தலேவர் பல்ராம் ஜாக்கர். வலது கையில் ஒரு பாண்டேஜ் போட் டிருந்ததால், முதுநிலேப் பட்டங்களே மாணவர்களுக்கு இடது கையால் கொடுத்து, இடது கையாலேயே கை குலுக்கவும் வேண்டி யிருந்தது. அவர் கூறினர்:

''எப்போதுமே வலது கைக்குத்தான் கைகுலுக்கும் சிறப்புத்தகுதியும் வாய்ப் பும் இடைக்கிறது. இன்று, என்றுமே இளக்கார நிலேயில் இருக்கும் இடது கைக்கு அந்த வாய்ப்புக் கிடைத்திருக் கிறது. இந்த சோஷலிச சமவாய்ப்பு இடதுகைக்கும் கிட்டியதற்குக் காரணம் வலது கைக்கு நடந்த அறுவைச்சிகிச்சை தான். இப்படி ஒரு சமுதாய அறுவை யைச் சிகிச்சை செய்தால்தான் ஏழை களும் நாட்டின் முன்னேற்ற சுபிட்சத் தைச் சுவைக்க முடியும்.''

நேரில் கேட்டு ரசித்தவர்:
—பாத்திமுத்து சித்திக்

''சினிமாப் புடிக்கிறியா.'' திரும்பி விழி விரியக் கேட்டாள். நரை வெள்ளி மின்னிற்று.

பனி விழும் மலர் வனம் — உன்
பார்வை ஒரு வரம் — இனி
வரும் முனி வரும் தடுமாறும்
கனி மரம்....

விஸ்வநாதனுக்கு மனசில் கேமரா விர் இட்டது. இவளே நடனம் ஆடச் சொன்னுல் என்ன? இவள் ஆட்டத்தை மனசுக்குள் படம் பிடித்தால் என்ன? இவளே மட்டும் ஆடச் சொல்லி இந்தப் பாட்டுப் படமாக் கினுல் என்ன? சொன்னதும் ஆடினுள். இஷ்டத்திற்கு வளேந்து நெளிந்து குலுங்கிச் சிரித்துக் கேலி பேசி ஆடினுள். பாட்டு முடிய விஸ்வநாதன் கைதட்டிப் பாராட்டினுன். மெல்லக் கன்னங்களேப் பொத்தி நெற்றியில் முத்தமிட்டான். அப்பா.... இப்பத்தான் இடைஞ்சல் இல்லாமல் ஒரு பாட்டு முழுசா ஃபிலிம் பண்ண முடிஞ்சது.

''உனக்குப் பாடத் தெரியுமா வசந்தா?''

''பாட்டுப் பாடினு உட்டுடுவீங்களா?''

(தொடரும்)

# எச்சரிக்கை!



சென்னை தனியார் நிறுவனம் ஒன்றில், அதிக வட்டி கிடைக்கும் என்ற நப்பாசையில், அப்பளம் இட்டு விற்கும் கிழவி முதல் அட்வகேட்டுகள் வரை ஆயிரக்கணக்கான பேர் தங்கள் சேமிப்புப் பணத்தைப் போட்டுவிட்டு, அசலும் போய் வட்டியும் வராத நிலையில் கையைப் பிசைந்து கொண்டு நிற்கிற அவலம் தற்போது உண்டாகியிருக்கிறது. (மொத்தத் தொகை சுமார் நாலரைக் கோடி ரூபாய் என்று தெரிகிறது!) பெங்களூரிலிருந்துமட்டும் ஒரு கோடி ரூபாய் வரை டெபாஸிட் செய்திருக்கிறார்களாம்!

சென்னை பிரஸிடென்ஸி கல்லூரியில் பயிலும் மாணவி, இந்த வட்டித் தொகையை மட்டுமே நம்பியிருப்பவராம். முப்பதாயிரம் ரூபாய் இழந்த வழக்கறிஞர் ஒருவரைப் பார்த்து விவரம் சொல்லிவிட்டுச் சொந்த ஊரான சேலத்துக்குப் புறப்பட்டுப் போனார். இன்னொரு பெண்மணி, கணவரின் பிராவிடெண்ட் ஃபண்ட், கிராஜுவிடி ஆகிய சுமார் ஒரு லட்ச ரூபாயை மகன்கள் மகள்கள் பேரில் டெபாஸிட் செய்துவிட்டு மொத்தத்தையும் இழந்துவிட்டு, 'என்ன செய்வது இனிமேல்!' என்று இடிந்து போய் இருக்கிறார். கணவனை இழந்த ஐம்பது வயதுப் பெண்மணி ஒருவர் தமது மகளது திருமணத்துக்காகப் பணம் சேமித்து வைத்திருந்ததாயும், இப்போது ஒரேயடியாக மோசம் போய்விட்டதாயும் நீதிபதியிடம் தழுதழுத்த குரலில் முறையிட்டார்.

பாதிக்கப்பட்ட வழக்கறிஞர் ஒருவர், இன்ஸால்வன்ஸி சட்டம் 16வது விதியின்படி, மேற்படி கம்பெனியைத் திவால் ஆனதாக அறிவிக்கும்படியும், அபிஷியல் அஸைனி என்கிற கோர்ட் அதிகாரியை நியமித்து கம்பெனியின் சொத்துக்கள் ஏதும் இருந்தால் அவற்றை முடக்கி டெபாஸிட் செய்தவர்களுக்குக் குறைந்தபட்சத் தொகையேனும் வழங்க முன்வரவேண்டும் என்று உத்தரவிடுமாறும் வேண்டிக் கொண்டிருக்கிறார்.

இம்மாதிரி கம்பெனிகளைத் தடை செய்ய அரசு சட்டமியற்ற வேண்டும் என்பது பாதிக்கப்பட்ட ஒருவரது கருத்து.

வங்கிகள் தரும் வட்டி இந்த மோசடிக் கம்பெனிகள் (கொஞ்ச காலத்துக்கு!) தரும் வட்டியை விடக் குறைந்ததாக இருந்தாலும் அசல் கட்டாயம் திரும்பக் கிடைக்கும். பிரபல பொதுத் துறை, தனியார் துறை நிறுவனங்களில் போடப்படும் டெபாஸிட்டுகள் கூடப் பாதுகாப்பானவையாகக் கருதப்படுகின்றன. ஆனால், ''இதுபோன்ற மோசடிக் கம்பெனிகளில் முதலீடு செய்யும் வாடிக்கையாளர்கள் வேறு ரகம். எங்களிடம் இவர்கள் அணுகுவதேயில்லை. எங்கள் கட்சிக்காரர்கள் எல்லாம் இம்மாதிரி கம்பெனிகளில் டெபாஸிட் செய்ய மாட்டார்கள்; நாங்கள் ஆலோசனை கூறுவதைக் கேட்டு, அதன்படி நடக்கும் வாடிக்கையாளர்களுக்கு இந்த ஏமாற்றம் ஏற்படுவதேயில்லை!'' என்கின்றனர் பிரபல நிதி ஆலோசனை நிறுவனத்தைச் சேர்ந்தவர்கள்.

இதுபோன்று அதிக வட்டி தருவதாக மக்களை ஈர்த்து விளம்பரம் செய்து, பிரமாண்டமான தொகை சேர்த்ததும் டெபாஸிட் செய்தவர்களுக்கு ஏமாற்றம் அளிக்கும் அபாயத்தை ஏனோ பொதுமக்கள் உணர்வதேயில்லை. பொது நலன் கருதி வெளியிடப்படும் சில வகை விளம்பரங்கள் உண்டு. இங்கிலாந்தில் காட்டுத் தீ (Forest fire) பற்றி விளம்பரம் செய்ய தனி நிதி வசதிகூட உண்டாம்.

குடும்பக் கட்டுப்பாடு, சுற்றுப்புறச் சுகாதாரம், பார்வை இழப்புத் தடுப்பு ஆகியவற்றுக்காக மக்கள் நலனை மட்டுமே மனத்தில் கொண்டு வெளியிடப்பட வேண்டிய விளம்பரங்களுக்காக, பம்பாயில் விளம்பரத் துறை நிபுணர் ரோஜர் பெரைரா போராடி வருகிறார். பொதுமக்களை ஆசை காட்டி மோசம் செய்யும் மேற்படி நிறுவனங்களிடமிருந்து மீட்கும் பணியையும் விளம்பர நிறுவனங்கள் கூட்டு முயற்சியாக மேற்கொள்ளலாம். இதை மிகப் பெரிய சமுதாயக் கடமையாக அவர்கள் கருத வேண்டும்.

-சாருகேசி



# வேண்டாம் ஸார், விஷமத்தனம்!

'காட்டு மிருகங்கள் நாட்டுக்குள் வருவதேன்?' என்ற கட்டுரை படித்தேன். இன்றைய மனிதன் மனிதனாக வாழவில்லை. மனிதனிலிருந்து நினைத்துக்கூடப் பார்க்க இயலாத அளவுக்கு அதிபயங்கரமான மிருகம் தோன்றிவிட்டதோ என்று எண்ணத் தோன்றுகிறது. மிருகத்தனமான செயல்கள் அதிகரித்து வருகின்றன. இன்று நாடு காடாகிவிட்டது. எனவே காட்டு மிருகங்கள் நாட்டுக்கு வரட்டும். நாட்டிலுள்ள மனித மிருகங்கள் காட்டுக்குப் போகட்டும். அப்போதாவது இவன் திருந்துவானா?

பம்பாய்-5 சில்வெஸ்டர் ஜி. பெர்னாண்டோ

சமீபத்தில் வெளிவந்துள்ள ''உறங்காத நெஞ்சங்கள்'' என்னும் திரைப்படத்தில் நடிகை ராதிகாவின் பாத்திரம் கல்கி ஆசிரியர் கி. ராஜேந்திரன் எழுதிய ''சாருலதா''வின் அப்பட்டமான நகல்.

குனியமுத்தூர் ஏ.கே. பாலசுப்பிரமணியம்

கேள்வி பதில் பகுதியில் என்னைப் பற்றிய கேள்வியும் பதிலும் கண்டேன். நாற்பது பக்கக் கட்டுரையில் சம்பந்தமில்லாமல் நடுவில் அமெரிக்க ஸெக்ஸைப் பற்றி வெளியிட

வட்ட மேஜை



குங்குமத்துக்குத்தான் அவசரம் என்றால் முழுக் கட்டுரையையும் படித்துப் பார்த்துப் பதில் எழுதும் பண்பு உங்களுக்கு இல்லையே. அமெரிக்கா முழுவதும் பல கல்லூரிகளிலும் உயர்நிலைப் பள்ளிகளிலும் தற்கால இந்திய இலக்கியம் பற்றியும், தமிழ் இலக்கியம் பற்றியும் நான் பேசிப் பெற்ற பாராட்டுக்கள் அமெரிக்கப் பத்திரிகைகளில் வெளிவந்துள்ளன. அயோவா பல்கலைக் கழகம் எனக்கு கௌரவப் பட்டமும் அளித்துச் சிறப்பித்துள்ளது. நான் எவ்வளவு உழைத்து ஆராய்ச்சிக் கட்டுரைகள் எழுதிச் சென்றேன் என்பது எனக்கு உதவிய தமிழ் அறிஞர்கள் பலரும் அறிவார்கள்.

கோயமுத்தூர் உஷா சுப்பிரமணியன்

அமெரிக்காவிலிருந்து திரும்பி வந்ததும் வராததுமாக எழுதப்பட்ட கட்டுரை 'அளித்த ஏமாற்றம் அந்தக் கேள்வி பதிலில் பிரதிபலித்ததே தவிர திருமதி உஷா சுப்பிரமணியத்தின் ஆற்றலை உணராதவர் அல்ல நாம். நமக்கு ஏமாற்றம் ஏற்படக் குங்குமத்தின் பங்கு இக்கடிதத்தின் மூலம் தெளிவாகிறது. -ஆசிரியர்

நேற்று டி.வியில் ''இனியது இருபது'' நிகழ்ச்சி, இந்திரா அம்மையார் நிகழ்ச்சியாக இருந்தது. பாலகிருஷ்ணன் மாடு வைத்துப் பிழைப்பவர். ஒவ்வொரு வார்த்தைக்கும் 'அம்மையார் உதவினார்கள்' என்றே முடிக்கிறார். குப்பம்மா பழவியாபாரம் செய்பவர். ஐந்து குழந்தைகள். அத்தனையும் கான்வென்டில் படிக்க வைக்கிறார். 'இந்திரா காந்தி' உதவிதான்.

இவர்கள் இருவருக்கும் பாங்கு கடன் கொடுத்து மாதா மாதம் தவணையில் வசூலிக்கிறது. பாங்குக்கும் பாலகிருஷ்ணன்–குப்பம்மாவுக்கும் இடையில் இனியவை இருபது இந்திரா காந்தியை இழுத்துக்கொண்டு வந்து நிறுத்தியிருக்கிறது. இது ஆரோக்கியமான அரசியல் அன்று.

சென்னை-17 வேங்கடாச்சாரி

நிதி அமைச்சர் தம் நெஞ்சில் ஈரம் உள்ளது போல் காட்டிக் கொண்டிருக்கிறார். ஆனால் அவரது திறமையின்மையை வெளிச்சம் போட்டுக் காட்டியிருக்கிறார் தமது 'பட்ஜெட்'டில். வழக்கம் போல் முன்னதாகவே பெட்ரோல், டீசல் விலை உயர்வு, தபால் கட்டண உயர்வு, இரயில் கட்டண உயர்வு வெளியாகி இப்போது வந்த பட்ஜெட்டிலும் சிமெண்ட், சோடா மீது வரி போட்டு, தான் ஒரு 'ஏழைப் பங்காளன்' அரசு என்பதைக் காட்டிக்கொண்டிருக்கிறது. நிர்வாகம் செய்யத் திறமை இல்லாவிட்டாலும் 'சாதனை விளம்பரம்' போட்டுக்கொள்ள மட்டும் தயங்குவதில்லை.

சென்னை-56 பூவை விமலன்

முந்தாநாள் பெய்த மழையில் நேற்று முளைத்தவர்கள் எல்லாம் ஞானிகள் போல் பேசுவதும், அதற்கு உம்போன்ற விவரம் தெரிந்த மனிதர்கள் வக்காலத்து வாங்குவதும் எரிச்சலைத்தான் ஏற்படுத்துகிறது. 'பத்திரிகை உலக வேசி' என்று பண்பாடற்ற முறையில் பேசியது எங்கே? தன் உடன் பிறப்புகளின் வேண்டுகோளுக்கிணங்கக் கண்ணியமான முறையில் தாம் எழுதி வந்த தொடரை நிறுத்திக் கொண்ட கலைஞர் எங்கே? இந்த மாதிரி விஷமத்தனமான பதில்தானே வேண்டாமென்கிறது.

மேட்டுப்பாளையம் பி. பீட்டர்

எஸ். எஸ். எல். சி.க்கு அப்புறம் ஐ. ஐ. டி. படித்தாராமா அனுமந்து? எங்கே இருக்கிறது அப்படிப்பட்ட ஐ. ஐ. டி. – அதுவும் செங்கல்பட்டில்?

சென்னை-33 கே. வேதாந்தராமன்

''பத்திரிகை ஆசிரியர்களால் துஷ்பிரயோகப்படுத்தப்பட்ட மேதை'' என ஜெயராஜை வர்ணித்திருப்பது பொருத்தமே. சூழல், வாய்ப்புகள் ஆகியவற்றைப் பொறுத்துத்தான் கலைஞர்கள் வளர்ச்சி பெற முடியும்.

புதுதில்லி ஆதவன்

# கள்வனின் காதலி

## அத்தியாயம் 43

## "எங்கே பார்த்தேன்?"

"கண்ணால் கண்டதும் பொய்; காதால் கேட்டதும் பொய்; தீர விசாரித்தறிவதே மெய்'' என்று ஒரு முதுமொழி வழங்குகிறது. மக்கள் இதன் உண்மையை உணர்ந்து நடக்காத காரணத்தினால் உலகத்தில் எத்தனையோ தவறுகள் நேரிட்டு விடுகின்றன. பேதை கல்யாணி இப்போது அப்படிப்பட்ட தவறுதான் செய்தாள். கண்ணால் கண்டதை நம்பிவிட்டாள். நம்பினால்தான் என்ன? அதற்காக அப்படிப் பைத்தியம் பிடித்துவிட வேண்டுமா? ஐயோ கல்யாணி! என்ன காரியம் செய்து விட்டாய்? என்ன விபரீதத்துக்குக் காரணம் ஆனாய்? — ஆனால் உன்னைச் சொல்லித்தான் என்ன பயன்? விதியின் சதியாலோசனைக்கு நீ என்ன செய்வாய்?

கல்யாணி செய்த தவறு எத்தகையது என்பதை நாம் தெரிந்து கொள்வதற்குச் சற்றுப் பின்நோக்கிச் செல்ல வேண்டியிருக்கிறது. கொஞ்சம் சென்னை வரையில் பிரயாணம் செய்து அங்கே நடந்தவற்றைக் கவனித்தல் அவசியமாயிருக்கிறது.

* * *

"சங்கீத சதாரம்'' எதிர்பாராத காரணத்தினால் நடுவில் தடைப்பட்டு நின்ற இரவுக்குப் பிறகு இரண்டு மூன்று தினங்கள் வரையில், அந்த நாடகக் கம்பெனியைச் சேர்ந்தவர்கள் எல்லோரும் போலீஸ் கண்காணிப்புக்கும் விசாரணைக்கும் உட்பட்டிருந்தார்கள். ஆனால் என்ன விசாரணை செய்தும் கூட அவர்களிடமிருந்து எவ்விதத் தகவலும் தெரிந்து கொள்ள முடியவில்லை. தாங்கள் சென்னைக்கு வரும் வழியில் தற்செயலாக ரயிலில் வந்து சேர்ந்தவன் முத்தையன் என்றும், தங்களிடம் 'பலராம்' என்று பெயர் கொடுத்திருந்தான் என்றும், சிறந்த நடிப்புத் திறமை அவனிடம் இருந்தபடியால் தங்கள் கம்பெனியில் சேர்த்துக் கொண்டதாகவும், மற்றபடி அவனைப் பற்றித் தங்களுக்கு ஒன்றுமே தெரியாதென்றும் சொல்லி விட்டனர். உண்மையிலேயே அவர்களில் ஒருவனைத் தவிர மற்றவர்களுக்குத் தெரிந்திருந்ததே அவ்வளவுதான் அல்லவா?

ஆகவே கமலபதி ஒருவன்தான் விசாரணையின்போது பொய் சொல்லவேண்டியதாயிருந்தது. அது விஷயத்தில் அவன் கொஞ்சம் கூடத் தயக்கம் காட்டாமல் அழுத்தமான பொய்யாகவே சொல்லிச் சமாளித்துக் கொண்டான். அவன் விஷயத்தில் விசேஷ கவனம் செலுத்துவதற்கு எவ்வித முகாந்திரமும் இல்லாதபடியால், சந்தேகமும் ஏற்படவில்லை.

இரண்டு மூன்று நாளைக்குப் பிறகு போலீஸார் நாடகக் கம்பெனியின் கண்காணிப்பை நிறுத்தி விட்டார்கள். அதில் ஒன்றும் பிரயோசனமில்லை என்று அவர்களுக்கு நிச்சயமாகி விட்டது. அவ்வாறே அவர்கள் அபிராமியையும் ஒரு நாள் விசாரணை செய்துவிட்டு அவளிடமிருந்தும் ஓடிப் போனவனைப் பற்றி எவ்விதத் தகவலும் தெரிந்து கொள்ள வழியில்லை என்று விட்டு விட்டார்கள். அந்த அநாதைப் பெண்ணிடம் சகோதரி சாரதாமணி தேவி முன்னைவிடப் பன்மடங்கு விசுவாசம் காட்டித் தேறுதல் கூறி வந்தார். ஆனாலும் அபிராமியின் உள்ளத்தில் ஒரு கணமேனும் அமைதி ஏற்படவேயில்லை. சில சமயம் தன்னுடைய அண்ணனின் சாமர்த்தியத்தை நினைத்து நினைத்து அவள் வியப்படைவாள்: அப்போது அவளுக்கு மிகவும் பெருமையாகக்கூட இருக்கும். அவன் உண்மையிலேயே கள்ளனாயிருந்து, நாடகத்திலும் கள்ளன் வேஷம் போட்டதை நினைத்துப் புன்னகை கொள்வாள். அவனுடைய நடிப்பை நினைக்கும்போது அவளுக்குச் சிரிப்புக்கூட வரும். ஆனால் இரண்டு மாதமாக அவன் சென்னை நகரில் தங்கியிருந்தும் தன்னை வந்து பார்க்கவில்லை என்பதை எண்ணி எண்ணி உள்ளம் நைவாள். பிறகு, தான் மூர்ச்சை

யடைந்து விழுந்தபடியால்தான் அவன் இன்னான் எனத் தெரிந்ததென்பதையும் அதனால்தான் அவன் ஓடவேண்டியிருந்த தென்பதையும் எண்ணும்போது அவ னுடைய நெஞ்சு வெடித்து விடும் போலிருக்கும். ''ஐயோ! இந்தப் பாவியினால் முத்தையனுக்கு எப்போ தும் துன்பந்தானா?'' என்று எண்ணி உருகுவான். பிறகு அத்தனை போலீஸ் பந்தோபஸ்துக்களுக்கு இடையில் அவன் மறுபடி தப்பித்துக்கொண்டு போனதை நினைக்கும்போது அவனுக்கு உற்சாகம் உண்டாகிவிடும்.

* * *

இப்படி இருக்கும்போது ஒரு நாள் அவளை யாரோ பார்க்க வந்திருப்ப




தாகவும் வித்யாலயத்தின் தலைவி அழைத்து வரச் சொன்னதாகவும் ஒரு மாணவி வந்து கூறினாள். நாசமாய்ப் போகிற போலீஸ்காரர்தான் யாரா வது வந்திருக்க வேணுமென்ற நினை வுடன் அபிராமி, சகோதரி சாரதா மணியின் அறைக்குள் வந்ததும் அங்கே அந்த அம்மாளுடன் ஒரு வாலிபன் இருப்பதைக் கண்டாள்.

''அபிராமி! இந்தப் பையன் உன்னுடைய அண்ணனின் சிநேகிதன் என்று சொல்கிறான். முகத்தைப் பார்த்தால் பொய் சொல்லப் பட்டவனாகத் தோன்றவில்லை. உன் அண்ணன் உனக்கு ஏதோ சமாசாரம் சொல்லி யிருக்கிறானாம். இதோ பக்கத்து அறையில் உட்கார்ந்து பேசுங்கள். சரியாகப் பதினைந்து நிமிஷம் கொடுத்திருக்கிறேன்'' என்று சகோதரி சாரதாமணி கூறினார்.

இப்படி அவர் சொல்லி வரும்போதே அபிராமி ஆவல் ததும்பும் கண்களால் கமலபதியை நோக்கினாள். அடுத்த அறைக்குள் சென்றதும் ''அம்மாள் சொன்னது நிஜம்தானா? நீங்கள் என் அண்ணனின் சிநேகிதரா? எனக்குக்கூட உங்களை எங்கோ பார்த்த நினைவாயிருக்கிறதே!'' என்றாள்.

## பழமொழிகள்

- உன்னுடைய பிள்ளைகள் கெட்டவர்களாயிருந்தால் நீ அவர்களுக்குச் சொத்து வைக்க வேண்டாம்; அவர்கள் நல்லவர்களாயிருந்தால், உன் சொத்து அவர்களுக்குத் தேவையில்லை.
—பல்கேரியா

- ஓர் ஆணி ஒரு லாடத்தைக் காக்கும்; ஒரு லாடம் ஒரு குதிரையைக் காக்கும்; ஒரு குதிரை ஒரு வீரனைக் காக்கும்; ஒரு வீரன் நாட்டையே காப்பான்.
—துருக்கி

- காப்பியும் காதலும் சூடா யிருந்தாலே ருசி!
—ஜெர்மனி

- பதவியில் இல்லாதபோது ஒருவன் கண்டிக்கிற குற்றங்களைப் பதவியில் அமர்ந்தவுடன் அவனே செய்கிறான்.
—சீனா

- அதிர்ஷ்டம் சிற்றோடையாக வந்தால், துரதிர்ஷ்டம் காட்டாறாகவரும்.
—அயர்லாந்து

தொகுப்பு: அரிகோபி



''ஆமாம். பத்து நாளைக்கு முன்பு என்னுடைய விதவைத் தங்கைக்கு இந்த வித்யாலயத்தில் ஒரு இடம் கிடைக்குமா என்று பார்ப்பதற்காக வந்தேன். அது உங்களுடைய தலைவிக்கு ஞாபகம் இல்லை. உனக்கு நினைவு இருப்பதாகத் தோன்றுகிறது'' என்றான் கமலபதி.

''ஐயோ பாவம், அப்படி ஒரு தங்கை உங்களுக்கு இருக்கிறாளா? அவளை வித்யாலயத்தில் சேர்த்து விட்டீர்களா?''

''இல்லை: வித்தியாலயத்தில் சேர்ப்பதற்குள் அவள் செத்துப் போனாள். நானே கொன்று விட்டேன்'' என்று சொல்லிவிட்டுக் கமலபதி சிரித்தான்.

''இந்த ஆசாமிக்குப் பைத்தியம் போல அல்லவா இருக்கிறது?'' என்று அபிராமி எண்ணி, அவனை வெருண்ட கண்களுடன் நோக்கினாள்.

''இல்லை அம்மா! எனக்குப் பைத்தியம் இல்லை. உண்மையில் என்னுடைய தங்கையைப் பத்து நாளைக்கு முன்புதான் சிருஷ்டித்தேன். உடனே அவளை விதவையாக்கினேன். அவளால் ஆகவேண்டிய காரியம் முடிந்ததும், கொன்றே விட்டேன். அப்படி அவளை நான் சிருஷ்டித்தது என்னுடைய ஆத்ம சிநேகிதன் ஒருவனுடைய தங்கையைத் தேடுவதற்காகத்தான். உன்னை இங்கே கண்டு பிடித்ததும்....''

''நிஜமாகவா சொல்கிறீர்கள்? என்னைத் தேடும்படி என் அண்ணன் உங்களை அனுப்பினானா? என் ஞாபகம் அவனுக்கு இருந்ததா?''

''உன் ஞாபகத்தைத் தவிர வேறு ஞாபகமே அவனுக்குக் கிடையாது, அம்மா! உண்மையில், உன்னைத் தேடிக் கொண்டுதான் அவன் சென்னைப் பட்டணத்துக்கு வந்தது. வந்த இடத்திலே நாடகக் கம்பெனியில் சேர்ந்தான்...''

அபிராமி அவன் மேலே சொன்னதைச் சரியாகக் கவனிக்காமல் ஏதோ யோசனையில் ஆழ்ந்திருந்தாள்.

''என்ன யோசிக்கிறாய்?'' என்று கமலபதி கேட்டான்.

''உங்களைப் பார்த்ததிலிருந்து ஏதோ ஞாபகம் தொண்டையில் இருக்கிறது. மனத்துக்கு வரமாட்டேன் என்கிறது. அன்று இந்த வித்யாலயத்தில் உங்களைப் பார்த்த ஞாபகமே எனக்கில்லை. வேறு எங்கேயோ எப்போதோ பார்த்தது போல் இருக்கிறது. உங்களுக்கு நினைவில்லையா?''

''ஆமாம்: இன்னும் ஒரு இடத்தில் பார்த்திருக்கிறாய். அதுவும் சமீபத்தில்

# சிக்கனம் எனும் சக்கரங்களில் சுழலும்

# சன்கோச்

லேலண்டு, டாடா, மற்றும் எல்லா சேசிஸ்களுக்கும் நாங்கள் கட்டும் நல்ல, தரமான 'சிட்டி' மற்றும் 'முபசில்' பஸ்பாடிகள்-சன் கோச்கள்-புதுவித முகப்புகள், அழகான கிரில், பெரிய விண்ட் ஷீல்ட் கண்ணாடி ஆகியவற்றுடன் கவர்ச்சிகரமாகக் காட்சி அளிக்கின்றன.

**இதோ எங்கள் விலைகள்! ஒப்பிட்டுப் பாருங்கள்!**

| | | | |
|---|---|---|---|
| லேலண்ட் வைகிங் | 210" | 56 சீட்கள் | ரூ. 79,900 |
| லேலண்ட் சீட்டா | 210" | 54 சீட்கள் | ரூ. 79,800 |
| டாடா | 205" | 53 சீட்கள் | ரூ. 76,000 |



**சுந்தரம் இண்டஸ்ட்ரீஸ் லிமிடெட்,**
கோச் டிவிஷன்,
மதுரை.



EP-SI 101

# யூ.எல்.ஐ.பியில் முதலீடு செய்ய மூன்று முக்கிய காரணங்கள்.

யூ.எல்.ஐ.பி (யூனிட் லிங்க்ட் இன்சூரன்ஸ் பிளான்) உங்கள் குடும்பத்துக்கு பாதுகாப்பு கொடுப்பதுடன் வேறு சில நன்மைகளையும் கொடுக்கிறது.

<u>வரிச்சலுகை</u> : ஆண்டு தோறும் யூ.எல்.ஐ.பி யில் முதலீடு செய்யும் உங்கள் பணத்திற்கு பிரத்யேக வரிச்சலுகை கிடைக்கிறது.

<u>ஆயுள் பாதுகாப்பு</u> : நீங்கள் சேர்ந்திடும் குறியீட்டுத் தொகைக்கு மருத்துவ பரிசோதனை இல்லாமலே ஆயுள் பாதுகாப்பு அளிக்கப்படுகிறது.

<u>விபத்து பாதுகாப்பு</u> : ரூ 15,000 வரை விபத்து பாதுகாப்பும் அளிக்கப்படுகிறது.

இது மட்டுமா ? முதலீட்டுக்கு அதிக வருமானமும் உண்டு.

| காலம் | வருடாந்திர தவணை தொகை | குறியீட்டுத் தொகை | திட்ட முடிவில் கிடைக்கும் தொகை |
|---|---|---|---|
| 10 வருடங்கள் | ரூ 1,200 | ரூ 12,000 | ரூ 18,500 |
| 15 வருடங்கள் | ரூ 800 | ரூ 12,000 | ரூ 23,000 |

ரூ 12,000 மதிப்புள்ள யூ.எல்.ஐ. பி திட்டத்தில் சேர்ந்து 3 ஆண்டுகள் கழித்து மற்றுமொரு திட்டத்திலும் சேரலாம். வரிகளைத் தவிர்த்திட திட்டமிடுங்கள் இப்பொழுதே. இதர விபரங்களுக்கு எங்கள் ஏஜெண்டுகள், தலைமைப் பிரதிநிதிகள் மற்றும் பாங்க் ஆஃப் பரோடாவின் கிளைகளை அணுகுங்கள்.



## யூனிட் ட்ரஸ்ட் ஆப் இந்தியா

தலைமை அலுவலகம் : பம்பாய்
(ஒரு பொதுத்துறை நிதி நிறுவனம்)
பிராந்திய செயலகம் :
ரெஜினா மான்ஷன், 46 செகண்ட் லைன் பீச்,
சென்னை-600 001. போன் : 27433

எங்கள் முக்கிய பிரதிநிதிகள் : ● ஏ. தனபால், 10-ஜே, ஹின்னிரோடு, கோவை-641 018 போன் : 34776 ● எம். ராமமூர்த்தி, 30 எல்.ஐ.சி காலனி, மதுரை : 625 002 போன் : 30160 ● கே. முத்துசாமி, 52-ஏ, வ.உ.சி நகர், தஞ்சாவூர் : 613 007 போன் : 1224 ● என்.கே. இன்கர்சால், 155 கவர்னரும்பிகை தெரு, அன்னதானபட்டி சேலம் : 636 002 போன் : 64302 ● எம்.எம். காஜா, பக்காளி பில்டிங் அனெக்ஸ், 41-B, திருவனந்தபுரம் ஹைரோடு, பாளையங்கோட்டை : 627 002 போன் : 2395 (வீடு)

**உங்கள் சேமிப்பின் தொடக்கம் யூனிட்டுகளாக இருக்கட்டும்.**

Sista's-UTI. 74.82.TM. C

தான்.... நான்தான் சதாரம்'' என்றான் கமலபதி.

''ஓஹோ!'' என்று சொல்லி அபிராமி சிரித்தாள். பளிச்சென்று அவளுக்கு ஞாபகம் வந்து விட்டது. அவனுடைய ஸ்திரீ வேஷத்தை நினைத்த போது அவளுக்குத் தாங்க முடியாத சிரிப்பு வந்தது. பக்கத்து அறையில் இருந்த சாரதாமணி கோபித்துக்கொள்ளப் போகிறாரே என்று பயந்து வாயை மூடிக்கொண்டாள்.

* * *

பிறகு அபிராமி கேள்வி மேல் கேள்வியாகப் போட்டு, கமலபதிக்கும் முத்தையனுக்கும் சிநேகம் ஏற்பட்ட வரலாற்றை யெல்லாம் அறிந்து கொண்டாள். முத்தையன் மதில் சுவர் ஓரம் நின்று அபிராமியைப் பார்த்ததையும் அவளுடைய பாட்டைக் கேட்டதையும் கமலபதி சொன்னபோது அவள் கண்ணீர் பெருக்கினாள். பிறகு முத்தையன் நாடகக் கம்பெனியுடனே மலாய் நாட்டுக்குப் போக உத்தேசித்திருந்ததைச் சொன்னதும், அபிராமி ''ஐயோ! அதெல்லாம் இந்தப் பாவியினால்தானே வீணாய்ப் போயிற்று? நான் பெண்ணாய்ப் பிறந்ததே என் அண்ணனுடைய துன்பத்துக்காகத்தான்'' என்று சொல்லி விம்மி அழத் தொடங்கி விட்டாள்.

கமலபதி அவளுக்கு ஆறுதல் கூறித் தைரியம் சொன்னான். ''இப்போது ஒன்றும் மோசம் போய்விடவில்லை அபிராமி! உன் அண்ணனைத் தப்புவிக்கும் பொறுப்பு என்னுடையது. இந்த நிமிஷத்தில் அவன் எங்கே இருக்கிறான்என்று எனக்குத் தெரியும். இன்னும் இரண்டு நாளில் அவ்விடத்துக்குக் கிளம்பப் போகிறேன். எல்லா ஏற்பாடுகளும் செய்து விட்டேன். அடுத்த மாதம் இந்த நாளில் உன் அண்ணன் இந்த நாட்டிலேயே இருக்க மாட்டான். அபாயம் இல்லாத இடத்துக்குப் போய் விடுவான். அதற்கு நான் ஆயிற்று. நீ கவலைப்படாதே!'' என்றான்.

## அத்தியாயம் 44
## கோஷா ஸ்திரீ

மதுரை ஒரிஜனல் மீனாட்சி சுந்தரேசுவரர் நாடகக் கம்பெனியில் தபலா வாசிக்கும் சாயபு ஒருவர் இருந்தார். அவருக்கு முகம்மது ஷெரீப் என்று பெயர். சில நாடகக் கம்பெனிகளில் ஹார்மோனியக்காரனையும் தபலாக்காரனையும் மேடையில் நட்ட நடுவில் உட்கார வைப்பது போல் அந்தக் கம்பெனியில் உட்கார வைக்கும் வழக்கம் கிடையாது. பக்க வாத்தியக்காரர்கள் மேடையின் ஓரத்தில் மறைவான இடத்தில்தான் இருப்பார்கள். அவர்களை அதிகம் பேர் பார்த்திருக்கவேமுடியாது.

மேற்படி ஜனாப் முகமது ஷெரீப் சாயபு ஒரு நாள் ராத்திரி எழும்பூர் ரயில்வே ஸ்டேஷனுக்கு ஒரு கோஷா ஸ்திரீயுடன் வந்துசேர்ந்தார். கோஷா என்றால், புடவைத் தலைப்பைச் சிறிது இழுத்து விட்டுப் பாதி முகத்தை மூடும் அரை குறை கோஷா அல்ல. உயர்ந்த முஸ்லிம் குடும்பத்து மாதரைப்போல் தலையில் இருந்து பாதம் வரையில் ஒரு பெரிய அங்கியால் மூடி, கண்களுக்கு மட்டும் துவாரம் வைத்திருக்கும் சம்பூர்ண கோஷா. அந்தக் கோஷா ஸ்திரீயை அவர் பெண்கள் வண்டியில் ஏற்றிவிட்டுத் தாம் வேறு வண்டியில் ஏறி உட்கார்ந்தார்.

மறுநாள் அதிகாலையில் இவர்கள் கொள்ளிடத்துக்கு அடுத்த புரசூர் ஸ்டேஷனில் இறங்கி, ஒரு மாட்டு வண்டி பிடித்துக் கொண்டு மேற்கு நோக்கிப் பிரயாணமானார்கள். கொஞ்ச தூரம் போன பிற்பாடு அவர்கள் பிரயாணம் செய்த சாலை, கொள்ளிடக் கரையன் கரைச் சாலையோடு சேர்ந்தது. அந்தச் சாலையோடு ஏழெட்டு மைல் சென்றதும் அங்கே பெரும்பாலும் முஸ்



**உயிரோடிருப்பவருக்கு அஞ்சலி!**

மே. வங்க முன்னாள் முதலமைச்சர் பி. சி. கோஷ் சமீபத்தில் இறந்துவிட்டார். ஆனால், மத்திய பிரதேச சட்டசபை அவருக்கு அஞ்சலி செலுத்துவதற்குப் பதிலாக பி. சி. சென் என்ற தலைவருக்குச்சமீபத்தில்அஞ்சலி செலுத்தியது. ஆனால் பி. சி. சென் இன்னும் உயிரோடிருக்கிறார்.

—கே. கண்ணன்

சாதாரணமாகக் கடைகளில் ''இங்கு அரசியல் பேசாதீர்'' என்ற போர்டைத் தான் பார்க்கிறோம். குமரி மாவட்டம் கருங்கல் நியூ ஸ்டார் ஹோட்டலில் ''இங்கு மதப் பிரச்னையைப் பற்றிப் பேசாதீர்'' என்ற போர்டைப் பார்த்தேன்.

—கருங்கல் ஆர். ஜார்ஜ்




லிம்கள் வாழும் ஒரு கிராமம் இருந்தது. வண்டியை அவ்விடத்திலேயே நிறுத்திவிட்டு, ''நாங்கள் திரும்பி வரும்வரை காத்திரு'' என்று வண்டிக்காரனிடம் சொல்லிவிட்டு, சாயபுவும் கோஷாஸ்திரீயும் கொள்ளிடத்துப் படுகையில் இறங்கிச் சென்றார்கள்.

✻ ✻ ✻

**மு**த்தையன் பாழடைந்த கோவிலுக்கு அருகில் நாவல் மரத்தின் வேரில் தலையை வைத்துப் படுத்த வண்ணமாக, கல்யாணிக்குக் கோபம் வரும்போது அவளுடைய புருவங்கள் எப்படி வளைகின்றன என்பதைத் தன் மனக்கண்ணின் முன்னால் கொண்டு வரப் பிரயத்தனப் பட்டுக் கொண்டிருந்தான். எவ்வளவோ முயற்சி செய்தும் அது முடியாமல் போகவே, அவள் சிரிக்கும் போது அவளுடைய பல் வரிசைகள் எப்படி இருக்கின்றன என்பதை உருவகப்படுத்திப் பார்த்தான். பிறகு, இன்று அவள் வருவதற்கு இன்னும் எத்தனை நேரம் ஆகும் என்று எண்ணமிட்டவனாய் ஆகாயத்தில் சூரியன் எங்கே வந்திருக்கிறது என்று அண்ணாந்து நோக்கினான்.

முத்தையனுடைய உள்ளத்தில் நாளுக்கு நாள் அமைதி குன்றி வந்தது. ஒரே இடத்தில் தங்கி ஒரு வேலையும் செய்யாமல் உட்கார்ந்திருப்பது அவனுடைய இயல்புக்கே விரோதமல்லவா? சாலையில் மாட்டு வண்டிபோகும் சத்தம் கேட்கும்போதெல்லாம் அவனுக்குப் பரபரப்பு உண்டாகும். அந்த க்ஷணம் சாலைக்குப் போய் வண்டிக்காரனை இறக்கி விட்டுத் தான் மூக்கணையில் உட்கார்ந்து கொண்டு வண்டி ஓட்ட வேண்டும் என்ற ஆசை பொங்கிக்கொண்டு வரும். இராஜன் வாய்க்காலில் வரும் புது வெள்ளத்தில் குதித்துத் துளைந்து நீந்த வேண்டுமென்ற ஆவலினால் அவன் மனம் துடிதுடிக்கும். எங்கேயாவது மாடு ''அம்மா!'' என்று கத்துவது காதில் விழுந்தால் ஓடிப்போய் அதைப் பிடித்துக் குளத்தில் கொண்டு போய்க் குளிப்பாட்ட வேண்டும் என்று தோன்றும். இன்னும் பூங்குளத்தின் தெரு வீதிக்குப் போகவும், தன்னுடைய வீட்டைப் பார்க்கவும் ஆசை உண்டாகும். காலை நேரத்தில், கோவில் பிராகாரத்தில் உள்ள பவழ மல்லி மரத்தின் அடியில் புஷ்பப் பாவாடை விரித்திருக்குமே அதைப் போய் இப்போதே பார்க்க வேண்டும் என்று ஆர்வம் பொங்கிக் கொண்டு கிளம்பும்.

இவ்வளவு ஆவல்களையும் அடக்கிக் கொண்டு, முத்தையன் பொறுமையுட விருப்பதைச் சாத்தியமாகச் செய்தவள் கல்யாணிதான். அவள் மட்டும் தினம் ஒரு தடவை வந்து கொண்டிராவிட்டால் அவனால் இத்தனை நாள் இருந்திருக்கவே முடியாது. ''ஆயிற்று, இன்னும் கொஞ்ச நேரத்துக்கெல்லாம் கல்யாணி வந்து விடுவாள்'' என்ற நினைப்பில் அவனுக்குக் காலை நேரமெல்லாம் போய்விடும். அவனும் தானுமாய்க் கப்பல் பிரயாணம் செய்யப் போவதையும், மலாய் நாட்டில் ஆனந்தமாய் வாழ்க்கை நடத்தப் போவதையும் பற்றி மனோராஜ்யம் செய்வதில் மாலை நேரத்தில் பெரும் பகுதியைக் கழிப்பான்.

✻ ✻ ✻

**அ**ன்று முத்தையன் மரக் கிளைகளின் இடைவெளி வழியாக ஆகாயத்தில் சூரியன் வந்திருக்கும் இடத்தைப் பார்த்துவிட்டு, ''கல்யாணி வருவதற்கு இன்னும் இரண்டு நாழிகை பிடிக்கும்'' என்று எண்ணமிட்டான். அவள் வரும்போது தான் எங்கேயாவது ஒளிந்து கொண்டு அவள் என்ன செய்கிறாள் என்று வேடிக்கை பார்க்கலாமா என்பதாக ஒரு யோசனை அவன் மனத்தில் தோன்றிற்று. ''அப்படி நாம் ஒளிந்து கொண்டால் அவள் பதற்றத்துடன் அப்புறமும் இப்புறமும் கண்களைச்

சுழற்றிப் பார்ப்பாள் அல்லவா? அவளுடைய புருவங்கள் நெரிந்து வளையுமல்லவா? அந்தத் தோற்றம் எவ்வளவு அழகாயிருக்கும்!'' என்று அவன் எண்ணமிட்டுக் கொண்டிருக்கும்போதே சலசலவென்று செடிகள் அசையும் சப்தம் கேட்க, திடுக்கிட்டுச் சப்தம் வந்த திசையை நோக்கினான். அவனுக்கு எதிரே தலை முதல் கால்வரை கோஷா அங்கி தரித்த உருவம் ஒன்று வரவே ஒரு கண நேரம் அவன் பதறிப் போனான். சட்டென்று கீழே பக்கத்தில் கிடந்த ரிவால்வரை எடுத்துக்கொண்டு துள்ளி எழுந்தான்.

''யார் அது?'' என்று அதட்டிய குரலில் கேட்டு, கைத் துப்பாக்கியை நீட்டிப் பிடித்தான்.

கோஷா அங்கியின் உள்ளிருந்து கிண்கிணி சப்திப்பது போன்ற சிரிப்புச் சத்தம் கேட்டது. அடுத்த நிமிஷம் அங்கி எடுத்தெறியப்பட, உள்ளிருந்து திவ்விய சௌந்தரியம் பொருந்திய மோகன ஸ்திரீ உருவம் ஒன்று வெளிப்பட்டது.

''நீதானா கமலபதி! ஒரு நிமிஷத்தில் என்னை இப்படி மிரட்டி விட்டாயே? நிஜமாகவே பயந்து போனேன்!'' என்றான் முத்தையன்.

ஆம். அந்த கோஷா ஸ்திரீ உண்மையில் பெண் உருவத்தில் இருந்த கமலபதிதான். கொள்ளிடக் கரைப் பிரதேசத்தில் முத்தையனைப் பிடிப்பதற்குப் பலமான போலீஸ் ஏற்பாடுகள் நடக்கின்றன என்பதை அறிந்து இம்மாதிரி வேஷத்தில் வந்தால்தான் சந்தேகம் ஏற்படாமல் அவனைப் பார்க்க முடியும் என்று தீர்மானித்துத்தான் அவன் இப்படிப் பெண் வேஷம் தரித்துக் கோஷாவாக மாறி இங்கே வந்தது. அபிராமியிடம் அன்று ''நான்தான் சதாரம்'' என்று அவன் சொன்னபோது, இந்த யோசனை அவன் மனத்தில் உதயமாயிற்று.

ஐயோ! துரதிர்ஷ்ட வசமாக அவனுக்குப் பெண் வேஷம் இவ்வளவு நன்றாகப் பலித்தல்லவா இருந்து விட்டது? நாடகத்தில் அவனைப் பார்த்திருக்கும் நாமே ஒரு நிமிஷம் மயங்கிப் போய் விட்டோமென்றால், பேதை கல்யாணி என்ன கண்டாள்? அவனை ஓர் இளமங்கை என்றே அவள் கருதி விட்டதில் வியப்பில்லை அல்லவா? ஆஹா! அதனுடைய பலன்தான் எவ்வளவு விபரீதமாகப் போய் விட்டது!

(தொடரும்)

---

## மூக்குச் சல்லடை

● நேற்றுவரை யாராவது உங்களிடம் வந்து, ''ஆஸ்துமா நோயினால் அலர்ஜியும், சைனஸ் தொல்லையுமாக அவதிப்பட்டேன். இப்போது மூக்கில் ஒரு சல்லடை பொருத்திக் கொண்ட பிறகு அவை போன போக்குத் தெரியவில்லை!'' என்று கூறியிருந்தால், ''சுவாமி! மூக்கு உமது; என்னமோ செய்யும். காது எனது. பூ சுற்றாதீரும்!'' என்று ஒதுங்கி யிருப்பீர்கள். ஆனால் இனி அப்படி அலட்சியமாகப் பேச முடியாது. திரு ஜி. வி. சுந்தரராஜன் என்ற. மருத்துவப் பயிற்சி பெற்ற நிபுணர் உண்மையாகவே அப்படி ஒரு மூக்குச் சல்லடை கண்டு பிடித்திருக்கிறார்.

தமது தாயார் 45 ஆண்டுகளாக ஆஸ்துமா நோயால் துன்பப் பட்டதைத் தொடர்ந்து, இவ்வகை நோயாளிகளின் துன்பங்களைப் போக்கும் முயற்சியில் தீவிரமாக இறங்கிய திரு சுந்தரராஜன், புது தில்லி ஆல் இந்தியா இன்ஸ்டிடியூட் ஆஃப் மெடிகல் சயன்ஸில் பணியாற்றி வரும் டாக்டர் பல்ரிச்சா என்ற பஞ்சாபி நிபுணரின் உதவியோடு இதைக் கண்டுபிடித்தாராம்.

நோயாளிகளிடம் நோயின் தன்மையைக் கேள்விகள் போட்டுக் குடைந்து தெரிந்து கொண்டு அவர்கள் மூக்கு அளவுக்கு ஏற்ப வடிவமைத்துப் பொருத்தி விடுகிறார். அதை எப்படிக் கையாளுவது என்பது பற்றியும் பயிற்சி அளிக்கிறார். மூக்கில் பொருத்த சுமார் இரண்டரை மணி நேரம் ஆகிறது. மூக்கின் வெளியே நீட்டிக் கொண்டிராமல் முகத் தோற்றத்திற்கு எந்த வித பாதிப்பும் ஏற்படாமல் பொருத்தி விடுகிறார். இதை உபயோகிப்பதால் எந்த விதப் பின் விளைவும் ஏற்படுவதில்லையாம்.

இடைவிடாத தும்மல், சுவாச சத்தம், (வீஸிங்) இவற்றையும் தடுக்கும் இந்தச் சல்லடை. பல்வேறுதொழிற்சாலைகளிலிருந்து வரும் தூசு அணுக்கள் வாகனங்களின் புகை, காற்று மண்டலத்தை அசுத்தப்படுத்தும் கண்ணுக்குத் தெரியாத தூசுகள் இவற்றைத் தடுத்துச் சுத்தமான காற்று உடலுக்குள் செல்ல இது உதவுகிறதாம். ஆக பொல்யூஷனுக்கும் சொல்யூஷன்!

—சாருகேசி





வெண்மைப் படுதாவின் மீது அந்தி ஓவியன் கருமை வண்ணத்தைத் தீட்டத் தொடங்கினான். வண்ண விளக்குகள் ஒளிரத் தொடங்கியதும் கடற்கரை ஒளி வெள்ள மாகியது. இதற்கெல்லாம் தூரமாக, பார்டர் கட்டிய இருளின் தனிமையில் உட்கார்ந்திருந்தான் ராஜு. சற்றுத் தூரத்தில் கல கலத்த பெண்கள் எழுந்து விட்டனர்.

''ஏய் அனு, எழுந்திரு. மணி எட்டுடி'' என்று வெண்கலக் குரலில் கணகணத்தாள் ஒருத்தி.

'அனு' — மனத்தினுள் மணியடிக்கச் சட்டென்று திரும்பினான். அவளா? அவள்தானா? அண்ணி இறந்த துயரம் கவிழ்ந்திருந்த மனத்தில் ஒரு புல்லரிப்பு. அண்ணி வீட்டுக்குள் வந்து இரண்டே ஆண்டுகள்தான்! அவனைத் தன் பிள்ளையாகப் பாசத்தைக் கொட்டியவள் இன்று இல்லை. அந்தச் சோகம் தாங்காமல் வந்தவனுக்குக் கடற்கரைக் காற்றால் புழுக்கத்தைப் போக்க முடியவில்லையே?

அனுவின் பார்வை பட எழுந்தபோது அனுவே இவனைப் பார்த்து விட்டாள். அனு அவன் அலுவலகத்தில் ஒரு மாதத்திற்கு முன்புதான் வேலைக்குச் சேர்ந்திருந்தாள். அந்தச் சமயம் இவன் டூர் போயிருந்தான். வந்ததும் சம்பிரதாய அறிமுகம். இவளைப் பார்க்கும்பொழுதெல்லாம்—

இன்னொரு தடவை பார்க்க வேண்டும் என்ற ஆசையைத் தூண்டும் மனம். உலகத்துக் கதைகளையெல்லாம் பேசத் துடிக்கும் கண்கள்.

'அனு, உங்கிட்டே நிறையப் பேசணும் அனு. நீ ஏங்கிட்டப் பேசவியா?'

அருகில் நெருங்கும்பொழுது குபீரென்று சிரிப்பு வெள்ளத்தில் சிலிர்த்து மீள்வாள். அவள் அலுவலகம் சம்பந்தமான சந்தேகங்களைக் கேட்டுவிட்டுப் போய்விடுவாள். இந்த நிலையும் ஒருசில தினங்கள்தான். இதற்குள் அண்ணி போய்விட்ட செய்தியுடன் அவன் அப்படியே வாடிப் போனான். துயரம்

# நினைக்கத் தெரிந்த மனமே



சூழ்ந்த மனத்தில் அனுவுக்கு இடமில்லை.

இன்று இவளைக் கண்டதும் கூம்பிய தாமரையின் விரிவாக மனம் ஏன் விரிகிறது? அனு இவனைப் பார்த்து விட்டாள்.

''மிஸ்டர் ராஜு!''

நாலே எட்டில் அவன் அருகில் வந்தாள். பஞ்சடைந்த கண்களும், மழிக்காத முகமும் வார்த்தை வராத வாயும்—

''டீ இவளே, நீங்க போங்க. நான் அப்புறம் வரேன்'' என்று தன் தோழிகளை அனுப்பிவிட்டாள்.

அருவி ஒன்று கொட்டிக் கொண்டே நகர்வது போல அவர்கள் கேள்விகளைத் தூவிக் கொண்டு ஓடிப்போனார்கள்.

''நடந்ததைக் கேள்விப்பட்டேன் ராஜு. ரொம்ப வருத்தமா இருந்திச்சு. அண்ணிக்கு உங்க மேலே ரொம்பப் பிரியமாமே?''

அவள் ஊறிய ஊறலில் அவன் இதழ்களைக் கடித்துக் கொண்டான். மனத்துக்கு இனியவளின் ஆறுதல் துயரத்தைக் குறைப்பது போல உணர்ந்தான்.

''எல்லாமே கதையாப் போயிடுச்சு அனு''

''இப்படிச் சொல்லிட்டா எப்படி? கொஞ்ச நாள் அப்படித்தான் இருக்கும். டேக் இட் ஈஸி. எனக்கு அப்பாவும் இல்லை, அம்மாவும் இல்லை. ஒருத்தர் இறந்து போனால் அவங்க கூடவே நாமும் செத்திட முடியுமா ராஜு?''

அவளுடைய தத்துவத்துக்கு எதிராக அவனால் தர்க்கம் பண்ண முடியவில்லை.

அடுத்த இரண்டு மூன்று தினங்களுக்குள் ஒரு மாலை, அனு ராஜுவின் வீட்டுக்கு வந்து நின்றாள். படி ஏறும்பொழுது—

''அண்ணா, நீங்க என்ன சின்னப் பிள்ளையா? ஒரே ஒரு இட்லி தின்னுங்க அண்ணா ப்ளீஸ். இப்படி அண்ணி படத்துக்கு எதிரேயே எத்தனை நாள் உட்கார்ந்து அழுதுக்கிட்டு இருப்பீங்க?'' என்று ராஜு மன்றாடிக் கொண்டிருந்தான்.

நடையில் நின்ற அனுவுக்கும் அந்தக்காட்சி நன்றாகத் தெரிந்தது. இனம் புரியாத சோகம் அவள் நெஞ்சில் இழையோடியது.

''ராஜு!'' என்று மெல்லிய குரலில் அழைத்தாள்.

அவளை எதிர்பார்க்காத ராஜு. திடுக்கிட்டு விழித்தான். அனு வரவேற்பை எதிர்பார்க்காத சூழ்நிலையில் உள்ளே வந்தாள். ராஜுவின் அண்ணா ராம் தன் துயரத்தை விழுங்கிக் கொண்டான். ராஜுவை விட ராம் நல்ல பர்சனாலிடி. நல்ல உயரம். கண்கள் தீர்க்கமாக, இதழ்கள் அழுத்தமாக ஆண்மைக்கு இலக்கணமும் கூறின.

''அண்ணா, இவங்க என் ஆபீஸ்லே புதுசா வேலைக்குச்சேர்ந்திருக்காங்க.''

''அப்படியா?உட்காருங்கம்மா.''

''நடந்ததைக் கேள்விப்பட்டேன். பிறப்பைக் கூடத் தற்காலத்திலே மனிதர்கள் தடுத்து நிறுத்திடறாங்க. இறப்பைத் தடுக்க முடியறதில்லே. நம்மை விட மேலான ஒரு சக்தி இருக்குன்னு இதை விட என்ன சாட்சி வேணும்?... நான் வயசிலே, அனுபவத்திலே சின்னவ...'' என்று பேசிக் கொண்டு போனவளையே பார்த்தான் ராம்.

''இருந்தாலும் குழந்தை பிறந்த சேதி வரும்னு காத்திட்டு வெளியே நின்னோம். ரெண்டு உசிரும் போன சேதி வந்ததை இன்னும் என்னாலே தாங்க முடியல்லே. இத்தனைக்கும் நான் ஒரு 'பையோ கெமிஸ்ட்'. எங்க மருத்துவ மனையிலே நான் பார்க்காத சாவா?''

தங்கள் இருவருக்கும் இடையில் அனு துயரத்தைப் பகிர்ந்து கொள்ள வந்த நில்



லட்சுமி ராஜரத்னம்

ராஜுவுக்கு ரொம்பத் திருப்தி. இவள் பேச்சிலாவது அண்ணா சற்று அமைதியடைய மாட்டாரா!

தன்னையும் வளர்த்துக் கொண்டு, ராஜுவையும் வளர்த்தவன் அண்ணா. தன்னைக் கண் கலங்க விடாத அண்ணா இன்று நீராத கண்ணீரில் நீந்துவதா? அனு அந்த முன்னிரவில் மிருந்த உரிமையுடன் சமைத்து, அவர்களைச் சாப்பிட வைத்துவிட்டுத்தான் போனாள்.

ஒரு மாலை டூர் போய்விட்டு வந்தான் ராஜு. அண்ணா திறந்த வெளியில் உட்கார்ந்து சினிமாப் பாடல்களைக் கேட்டுக் கொண்டிருந்தான். நீண்ட காலத்திற்குப் பிறகு முகம் தெளிவாக, கண்களில் கலக்கம் நீங்கி – பழைய ராம் என்று சொல்லும் வகையில் மாறிக் கொண்டிருந்தான்.

''ராஜு, உடை மாத்திட்டு வா. உனக்கு ஒரு குட் நியூஸ் வச்சிருக்கேன்.''

''என்ன அண்ணா?''

''டேய், நான் கல்யாணம் பண்ணிக்கறதா முடிவு பண்ணிட்டேன்.''

உண்மையில் ராஜு திகைத்துப் போனான். அதற்குள் அண்ணாவால் அண்ணியை எப்படி மறக்க முடிஞ்சுது?

''என்னடா முழிக்கிறே? நான் திரும்பக் கல்யாணம் பண்ணிக்கிற ஐடியாவிலே இல்லே. ஆனா உனக்குப் பாரமா இருக்கக் கூடாது. இவன் என்னடா இப்படித் தடிப் பயலா வீட்டிலே உட்கார்ந்திருக்கானேன்னு உன் மனைவி நினைக்கக் கூடாது பார்!''

''அண்ணா, எனக்கு இன்னும் கல்யாணம் ஆகல்லே.''

''தெரியாதாடா பயலே. உன் 'உட்பி'யா வரவ நினைப்பாடா. புரிஞ்சுதா?''

அனு மின்னினாள். 'அனு, நீ இப்படி எங்க அண்ணாவை நினைப்பியா!' அனு, நீ என்னை 'லவ்' பண்றியா?'

''என்னடா இப்பவே கனவு காண்றே?''

''சொல்லுண்ணா. பெண் யாரு?''

அண்ணா பூவாகச் சிரித்தார். ''உனக்குத் தெரிஞ்சவள்தான் உன் அலுவலகத்தில் வேலை செய்யறாளே அவள்தான். அனு.''




தாஜ்மகலை இடித்தான் ராஜு. பிரேமைக்குத்தானே 'நினைவாலயம் தேவை?

"ராஜு, இங்கே பாருங்களேன். நானும் உங்க அண்ணாவும் உங்களுக்காகவே செலக்ட் பண்ணினோம். உங்கண்ணாதான் உங்களுக்கு விதவிதமா டிரஸ் பண்ணிக்கப் பிடிக்கும்னு சொன்னார். நான்தான் இந்த லைட் க்ரீம் கலரை ரொம்ப லைக் பண்ணினேன். நல்லா இருக்கா?'' அவள் பேசிக் கொண்டே பெட்டியைக் குடைந்தபோது, அவன் மௌனமாக வெளியேறினான்.

''என்னங்க, ராஜு எங்கிட்ட நின்னே பேச மாட்டேங்கறாரே?''

''அவன் முதல் அண்ணியை மறக்கல்லே அனு. அந்தச் சங்கடமா இருக்கலாம். ரெண்டு வருஷங்களில் அவனை அவள் கைப்பிள்ளையா வளர்த்துட்டா'' என்றான் ராம்.

ஒருசில தினங்கள் கழித்து ராஜு டூர் கிளம்பியபொழுது–

''என்னங்க, ராஜுவுக்குப் பெண் பார்க்கணும்னு சொல்லல்லே? இவரு பாட்லே டூர் கெளம்பறாரே!'' என்றாள் அனு.

பற்களைக் கடித்துக் கொண்டான் ராஜு.

நீர் மேலே டூர் போட்டுக் கொண்டு ஊரைச் சுற்றினான் ராஜு.

அவன் அலுவலகத்தில் வேலைகளை முடித்து விட்டுப் பிறகுதான் வீட்டுக்குள் வந்தான். வீட்டில் ஒரே அமைதி. திறந்தவெளியில் அண்ணா ராம் உட்கார்ந்திருந்தான்.

''அண்ணா!''

''ராஜு, வா... வா... இப்பத்தான் வரயா''

''ஆபீஸ் வந்துட்டு வரேன். அண்ணி எங்கேண்ணா?''

''உனக்குக் கோபம் இருக்கும். காதலியை மனைவியா வர இருந்தவளை அண்ணியா ஆக்கின குற்றவாளி நான்தானே?''

''அண்ணா!'' பதறினான் ராஜு.

''பொறு ராஜு.''

''தெரிஞ்சும் ஏண்ணா இப்படிப் பண்ணினீங்க? நான் சொல்லட்டுமா? அனுவை நீங்களும் காதலிச்சீங்க. இல்லையா?''

''சத்தியமா இல்லே ராஜு. ஒரு நாள் உன் அறையில் மேஜை மேலே ஒரு பேப்பர் பூரா 'அனு' ஐ லவ் யூ'னு எழுதி வச்சிருந்தே. உன் மனம் புரிஞ்சுது.''

''அப்படி இருந்தும்....'' குரல் உடைந்தது ராஜுவுக்கு.

''ஒரு நாள் காலே மருத்துவ மனை வாசலில் – அதாவது அந்தப் பக்கம் ரோடில் போன அனுவைப் பார்த்தேன். உன் விஷயமாகப் பேசணும்னு கூப்பிட்டேன். அவள் என் அறைக்கு வந்தாள். அந்தச் சமயம் பார், ஒரு அவசரக் கேஸ். ரத்தம் தேவை. அந்த க்ரூப் ரத்தம் இல்லே. அனு சொன்னா, தன் ரத்தத்தைப் பரிசோதனை பண்ணிப் பார்த்துட்டு எடுத்துக்குங்கனு.''

ராஜு நிமிர்ந்து பார்த்தான். கண்களில் வினா தெரிந்தது.

''பரிசோதனை பண்ணினப்ப எனக்குச் சந்தேகம். அது வீண் போகல்லே. ராஜு அனுவுக்கு லுக்குமியா. – ரத்தத்தில் புற்று

# நியூட்ரமுல் சக்தி.

## சேம்பியன்கள் தேர்ந்தெடுக்கும் சக்தி.

நியூட்ராமுல். அமுல் பால்வளம். அருமையான மால்ட்.
ஆரோக்கிய வைட்டமின்கள். ஆர்வமிகு புரதம்.
ஆதார உலோகதாதுக்கள். சப்புக் கொட்டிட சாக்கலேட்...
இவ்வளவுக்கும் விலை மலிவு—போர்ன்விடா, பூஸ்ட்,
மால்டோவா எதனையும் விட. மறவாதீர்கள் ஐஎஸ்ஐ தர
முத்திரை தாங்கியது நியூட்ராமுல் ஒன்றுதான்.
விளங்குவீர் நியூட்ராமுல் 'வஸ்தாத்'தாக.




**உயரம், வலிமை, உடல்திடம்--**
**பெருக்குவது எப்படி ?**

**பார்த்தறியாச் சலுகை: பலம்பெருக்கப் புத்தகம்!**

NUTRAMUL P.O. BOX 10148, BOMBAY-400 001. kk

அன்பார்ந்த நியூட்ராமுல்,
தாராசிங்கின் "ஹைட் இன்க்ரீஸ், ஸ்ட்ரெங்த் அண்ட் ஃபிட்னஸ்" புத்தகத்தை தயவுசெய்து எனக்கு அனுப்பிவைக்கவும். ரூ. 1.50 மதிப்புள்ள தபால் வில்லைகளோடு, நியூட்ராமுல் 500 கிராம் டின் வாங்கியதற்கான ரொக்க ரசீதையும் இத்துடன் இணைத்துள்ளேன். புத்தகங்கள் இருப்பிலுள்ள வரையே சலுகை என அறிகிறேன்.

பெயர் ______________________
(கொட்டை எழுத்துக்களில்)

முகவரி ______________________

விற்பனை விடுப்போர்:
குஜராத் கோ-ஆபரேட்டிவ் மில்க்
மார்க்கெட்டிங் ஃபெட. லிட.,
ஆனந்த்-388 001.

daCunha/GCM/76/TM/82

நோய். அவகிட்டச் சொல்லலே. உன் க்ருப் ரத்தம் பொருந்தாதுன்னு சொல்லிட்டேன்.''

''அப்படி இருந்தும் ஏன்னு கல்யாணம் பண்ணிட்டீங்க?''

''இப்ப அனு கான்ஸர் ஆஸ்பிட்டல்ல இருக்கா ராஜு.'' என்ற ராம் ராஜுவைக் கூர்ந்து பார்த்தான்.

''என்ன பார்க்கிறீங்க அண்ணா?''

''ஒருத்தி கூட வாழ்ந்துட்டுப் பிரியறதுங்கறது லேசு இல்லே ராஜு. ஏற்கனவே ஒரு தடவை அந்த அனுபவத்தை என் மனசு ஒத்திகை பார்த்து விட்டது. இன்னொரு தடவை சந்திக்கிறதிலே கஷ்டம் இருக்காது. ஆனா... ஆனா... அந்த அனுபவம் — மனைவியை இழக்கிற வேதனை உனக்கு வேண்டாம். காதலியை இழந்த தாபமே போறும்னு தான் இப்படிப் பண்ணினேன். நான் பண்ணினது தப்பா ராஜு?'' என்று ராம் தழுதழுத்தான்.

ராஜுவினால் அழத்தான் முடிந்தது.



அருள்வாக்கு

## அறுபத்து நான்கு கலைகள்

*சதுஷ் — ஷஷ்டி கலா*, அதாவது அறுபத்து நாலு கலைகள் என்று ஒரு கணக்கு சொல்வதுண்டு. இந்தக் கலைகளாகக் கூட அம்பாள்தான் இருக்கிறாளென்பதால் அவளுக்கு ஸஹஸ்ரநாமத்தில் 'சதுஷ்-ஷஷ்டி கலாமயி' என்று ஒரு நாமா இருக்கிறது.

லலிதா ஸஹஸ்ரநாமத்துக்கு பாஸ்கர ராயர் என்கிறவர் பண்ணின பாஷ்யம் ரொம்பவும் முக்கியமானது. அம்பாளுடைய அநுக்ரஹத்தால் எல்லாத் துறைகளிலும் ஆச்சரியப்படும்படியான வித்வத் உள்ளவராக இருந்தார் இந்த பாஸ்கர ராயர். இவர் அறுபத்து நாலு கலைகள் என்னென்ன என்று பல புராதன நூல்களை ஒப்பிட்டுப் பார்த்துத் தம்முடைய பாஷ்யத்தில் இன்னவென்று வரையறுத்துச் சொல்லியிருக்கிறார். வைதிக மதத்துக்கு ஆதாரமாயிருக்கிற வேதம், வேதாங்கள், உபாங்கம், உபவேதம் என்கிற பதினெட்டு வித்யா ஸ்தானமுமே இந்தக் கலைகளில் வந்து விடுகின்றன. ஷட்தர்சனங்கள் என்பதைச் சேர்ந்த ஸாங்கியம், யோகம் முதலான ஆத்மார்த்தமான மற்ற சாஸ்திரங்களும் வந்து விடுகின்றன. ஆனையேற்றம், குதிரை யேற்றம் இவையும் வருகின்றன. மந்திர சக்தியால் பண்ணுகிற ஆகர்ஷணம், வச்யம், திரஸ்கரணி என்ற கண்கட்டு வித்தை, இந்திரஜாலம் என்னும் மாஜிக், பித்தளையைப் பொன்னாக்குகிற ரஸவாதம், வைத்யத்தைச் சேர்ந்த நாடி சாஸ்திரம், விஷத்தை இறக்கும் 'காருட சாஸ்திரம்', ரூப லக்ஷணத்தைக் கொண்டே ஒருத்தனின் குணத்தையும், வாழ்க்கைப் போக்கையும் நிர்ணயம் செய்யும் 'ஸாமுத்திரிகா லக்ஷண சாஸ்திரம்', ரத்னப் பரீக்ஷை முதலான பலவற்றை அறுபத்து நாலில் காட்டுகிறார். இதில் அழகுணர்ச்சி, ரஸிக மனஸ், இந்திரிய இன்பம் முதலியவைகளைப் பூர்த்தி பண்ணுவதாகவும் பல இருக்கின்றன. மாலை, வாஸனைப் பொடி, நகை நட்டு முதலியவை செய்வது, பின்னுவது, எண்ணெய் தேய்ப்பது, பக்ஷிகளுக்குப் பேச்சு சொல்லித் தருவது, யௌவனம்-உண்டாக்குவது, புதிர் போடுவது, ஒருத்தர் முடிக்கிற வார்த்தையையே இன்னொருத்தர் ஆரம்ப வார்த்தையாய் வைத்து 'அந்தாதி' பாடுவது, ஒருத்தர் ஒரு ஐடியாவை ஒளித்து, பாதி மாத்திரம் சொல்லி விட்டதை இன்னொருத்தர் புரிந்து கொண்டு பாக்கியையும் சொல்லிக் கவிதையைப் பூர்த்தி செய்வதான 'ஸமஸ்யா பூர்ணம்' என்று இந்தக் கலைகளில் பல இருக்கின்றன. இவையும் காந்தர்வ வேதத்தில் வருவதாகவே வைத்துக்கொள்ளலாம். இப்படிப் பார்த்தால் 'ஜர்னலிஸம்' என்று தற்போது பரம ஜோரா வசீகரத்தோடு இருக்கிற பத்திரிகைத் தொழிலும் இதைச் சேர்ந்ததாக ஆகும். மொத்தத்தில் விசித்திரத்தைக் காட்டுவதெல்லாம் காந்தர்வ வித்தைகள் எனலாம். மாஜிக்தான் விசித்திரம் என்றில்லை. மாந்திரிகம்தான் விசித்திரம் என்றில்லை. வார்த்தை விசித்திரமாய்ப் பேசுவது, எழுதுவது, ஸ்வரதான விசித்திரமாய்ப் பாடுவதும், ஆடுவதும் ரஸ விசித்திரங்களைக் காட்டி நடிப்பது எல்லாமே விசித்திரம்தான்.

— **ஜகத்குரு ஸ்ரீகாஞ்சி காமகோடி சந்திர சேகரேந்திர ஸரஸ்வதி சங்கராசார்ய சுவாமிகள்**

*[அறுபத்து நான்கு கலைகளை உள்ளடக்கிய இந்து சமய கலை விழாவை ஜகத்குரு ஸ்ரீ ஜயேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள் மார்ச் 30ந் தேதி முதல் ஏப்ரல் 3ந் தேதி வரை சென்னையில் நடத்தவிருக்கிறார்கள். அறுபத்து நான்கு கலைகளிலும் போட்டி வைத்துப் பரிசுகள் அளிக்கவிருக்கிறார்கள்.]*





''ஃபோனில் பிரதமர் யாருடன் என்ன ரகசியம் பேசுகிறார்'' என்று கேட்கத் தோன்றுகிறதல்லவா? அண்டார்ட்டிகாவில் ஆராய்ச்சிக்குச் சென்ற விஞ்ஞானிகளுடன் தான் ஒயர்லெஸ் ஃபோனில் பேசுகிறார் பிரதமர். இதிலென்ன ரகசியம்? ''இருக்கிறது!'' என்கிறது வாஷிங்டன் போஸ்ட். அண்டார்ட்டிகாவில் இயற்கை வளங்கள் ஏராளம். எதிர்காலத்தில் அவற்றைப் பயன்படுத்த வல்லரசுகள் போட்டியிடும்போது இந்தியா தனக்கும் பங்குண்டு; மானுட நலனுக்கே இவ்வளங்கள் பயன்படுத்தப்பட வேண்டும் என்று அழுத்தமாகக் கூற தார்மீக பலம் வேண்டுமல்லவா? அதற்குத்தான் இப்போதே ஆராய்ச்சியை இந்தியா தொடங்கி விட்டது! செலவு ரூ. 2 கோடி.



கல்லோ மண்ணோ முட்புதர்களோ எதையும் லட்சியம் செய்யாமல் முன்னேறும் டாங்க், சேறு, சகதி என்றால் சிக்கிக்கொள்ள வாய்ப்புண்டு. இதனால் பாலம் அமைக்கும் டாங்க் ஒன்றை உருவாக்கியுள்ளார்கள். காட்டாறு, ஓடை என்று எதிர்ப்பட்டால் இந்த டாங்க் சில நிமிடங்களில் பாலம் அமைத்து விடும். அதன் மேல் டாங்குகள் உள்படக் கனமான ராணுவ வாகனங்கள் செல்லலாம்.



# ஃபோட்டோ பேஜ் 2



முதலைகளிலே மூன்று வகை: கரியால், க்ரோகடைல், அலிகேட்டர். முதல் இரண்டு வகை இந்தியாவில் இயற்கையாக உள்ளன. அலிகேட்டர் வகை அமெரிக்காவிலும் சீனாவிலும் உள்ளது. சென்னை முதலைப் பண்ணையில் ஆரம்பத்திலிருந்தே வளர்த்து வரப்பட்ட பெண் அலிகேட்டருக்கு ஜோடி தேவைப்பட்டது. மிகுந்த பிரயாசைப்பட்டு அமெரிக்காவிலிருந்து ஓர் ஆண் அலிகேட்டரைப் பரிசாகப் பெற்றிருக்கிறார் முதலைப் பண்ணை இயக்குனர் விட்டேக்கர். விமானத்தில் பறந்து வர ஆன செலவு ரூ. 5000. இந்தியாவில் உள்ள அலிகேட்டர்கள் இவை இரண்டுதானும் இன்று. ''ஒரு தடவைக்கு 30–35 முட்டை இடும்: அதில் 65 சதம் குஞ்சு பொரிக்கும்'' என்று கூறும் விட்டேக்கர் இப்போது பெண் முதலைக்கு ஆகாரம் குறைத்து ஆணுக்கு அதிகரித்துள்ளார். பெண்ணை விட ஆண் பெரிதாக வளர வேண்டும் என்பதால். உணவு: எலி, ஆட்டிறைச்சி, மீன்.

படம்: யோகா

• • •

சோவியத்யூனியன், துருக்மேனியா மாநிலத்தில் வருஷத்தில் 240 நாள் வெய்யில் காயும். எனவே சூரிய ஒளியைப் பயன்படுத்தி மின்சாரம் தயாரிக்கிறார்கள். 70 கி. மீட்டர் நீள அகலம் கொண்ட பிரதேசத்துக்கு மின் சப்ளை செய்ய 60 கோடி டன் பெட்ரோலியம் எண்ணெய் தேவைப்படும். அதை மிச்சப்படுத்தி, சூரிய சக்தியைப் பயன்படுத்திக் கொள்கிறார்கள். 20ம் நூற்றாண்டு முடிவதற்குள் 7000 நகரங்களுக்குச் சூரிய சக்தியினால் உருவாக்கப்படும் மின்சாரம் கிடைக்கச் செய்ய வேண்டும் என்பது திட்டம்.

ஹிட்லரின் படைகள் ருஷ்யாவில் புகுந்து லெனின்கிராடை 900 நாட்கள் கைப்பற்றியிருந்தன. உயிர்வாழ அடிப்படைத் தேவைகள் கூடக் கிடைக்காமல் நகரின் 60 சதம் மக்கள் மடிந்தனர். குழந்தைகளை ஹிட்லரின் படைகள் நெருங்கு முன்னரே வெளியேற்ற சோவியத் அரசு நடவடிக்கை எடுத்திருந்த போதிலும் சில குழந்தைகள் எப்படியோ அகப்பட்டுக் கொண்டன. அபாய அறிவிப்புச் சங்கு ஊதுவதைக் கேட்க அந்தக் குழந்தைகளின் முகபாவத்தை இப்படத்தில் காண்கிறோம். இதுபோன்ற படங்கள் சோவியத் மக்களுக்கு மட்டுமின்றி உலகுக்கே யுத்தத்தின் கொடுமைகளை உணர்த்த வேண்டும்.

• • •



பார்த்தசாரதி கோயில் யானை மதம் பிடித்து ஓடி சந்தில் ஒரு வீட்டுக்குள் தலையை நுழைத்துவிட்டு முன்னும் போக முடியாமல் பின்னேயும் வர முடியாமல் தவித்ததே நினைவிருக்கிறதா? அப்போது அந்த வீட்டில் தன்னந் தனியாக உயிரைக் கையில் பிடித்துக் கொண்டிருந்தவர் குமாரி கமலா. "நேராக சுவாமி அறைக்கு ஓடினேன். 'கணேசா! கணேசா!' என்று வேண்டிக் கொண்டேன். என் செல்லப் பொமரேனியன் பேபி விடாமல் குரைத்தது. மாடிப் போர்ஷனில் இருந்தவர்கள், 'நாயைக் கத்த விடாதீர்கள், யானை மேலும் கோபமடையப் போகிறது' என்றார்கள். பேபியை அள்ளி அணைத்துக்கொண்டு இதயம் 'திக் திக்' என்று அடித்துக்கொள்ள 45 நிமிஷ நேரம் நான் பட்டபாடு...." குமாரி கமலா பல்கலைக் கழக ஆராய்ச்சி மாணவி.

படம்: யோகா

# ஃபோட்டோ பேஜ் 3

# ஃபோட்டோ பேஜ் 4




ஆசிய விளையாட்டுப் போட்டியின்போது வெளிநாட்டவர் பலரின் அபார ஜிம்னஸ்டிக் ஆற்றலை டி.வி.யில் பார்த்தோம். ஜிம்னஸ்டிக்ஸில் இந்தியா பிற நாடுகளுடன் ஒப்பிடுகையில் பின்தங்கி இருந்த போதிலும் அவர்களுடன் அஞ்சா நெஞ்சத்துடன் போட்டியிட்டவர் நமது தேசிய சாம்பியன் சஞ்சீவினி காரண்டிகார். இத்தகைய வீரர் ஒரு நாள் தமது அறைக்குள் கதவைச் சாத்திக்கொண்டு விம்மி விம்மி அழுதார்! எதற்குத் தெரியுமா? பயிற்சிக் கூடத்துக்குப் போகும் வழியில் சைக்கிள் பங்சர் ஆகிவிட்டதாம். அதைத் திரும்ப வீட்டில் கொண்டு வந்து வைத்து விட்டுப் போகலாம் என்றால் நேரமாகிவிட்டதாம். 'இன்றைக்குப் பயிற்சி இல்லாமல் போய்விட்டதே' என்று அழுதாராம், இன்று 12வது வகுப்பில் படிக்கும் சஞ்சீவினி.

• • •

''இமைகள்'' படத்தைப் பற்றி இரண்டு அதிசயச் செய்திகள்: (1) ஒரு குஜராத்திப் படத்திலிருந்து இரண்டு கதாபாத்திரங்களை மட்டுமே எடுத்துக் கொண்டு புதுக் கதை பின்னியுள்ளார் வினு சக்கரவர்த்தி. இருந்தாலும் மூலக் கதாசிரியருக்குப் பணம் தந்து உரிமை பெற வேண்டும் என்று தயாரிப்பாளர் திருப்பூர் மணியிடம் கண்டிஷன் போட்டிருக்கிறார். (2) சிவாஜி இந்தப்படத்துக்காக முஸ்லிம் இளைஞன் மேக்அப் போட்டுவிட்டால் செட்டில் சந்திப்பவர்களுக்கு வணக்கம்கூடச் சொல்ல மாட்டார். 'சலாமாலேகும்'தான் இயல்பாக வருகிறதாம்.

தொகுப்பு: சலன்

# அசடு

அனுராதா ரமணன்

இத்தனை வயசுக்குப் பிறகும் அன்று தன் பெண்டாட்டியிடம் வசவு வாங்குவதைக் கண்டு மனசுக்குள் பொருமுவதைத் தவிர வேறெதுவும் செய்ய முடியவில்லை வாசுவினால்.

அம்மா!... என்ன பேச்சுப் பேசுகிறாள் இந்த மன்னி!

பாலுவைக் கண் கொண்டு பார்க்க முடியவில்லை அவனால். வயசென்ன, கொஞ்சமாவா ஆகிறது? நாற்பத்தியாறோ என்னவோ. கல்லூரியில் படிக்கிற பெண். பிள்ளைகள் இருக்கிறார்கள். இது தவிர, வாசுவின் குடும்பமும் இவர்களுடன் சேர்ந்துதான் இத்தனை வருஷமாய் இருக்கிறது.

ஒன்றுமில்லாத அல்ப விஷயங்களுக்கெல்லாம் ஏன் இவள் இப்படி ஓட ஓட விரட்டுகிறாள்.

வாசுவும் பார்த்து விட்டான். ஆரம்ப நாள் முதலே இப்படித்தான். அப்பொழுதெல்லாம் அம்மா இருந்தாள். மருமகள் மகனை எது சொன்னாலும் பல் மேல் போடுவது போல், 'நறுக்'கென நாலு வார்த்தை பதிலடி கொடுப்பாள்.

இப்பொழுதும் குழந்தைகளும், வாசுவும் பாலுவுக்காகப் பரிந்து பேசாமல் இல்லை. இப்படிப் பரிவதனால் மன்னி விசாலத்தின் கோபம் அதிகமாகுமே தவிரக் குறையாது.

''நன்னாயிருக்கு. அவர் கூடக் காலம் முழுக்க அவதிப்படறவ நான். உங்களுக்கெல்லாம் என்ன தெரியும்'' என்று ஒரு போடு போட்டு விடுவாள்.

அதுவும் தன் பிறந்த வீட்டு மனிதர்களின் முன், கணவனை அவள் மட்டம் தட்டிப் பேசுவது இருக்கிறதே... எரிச்சல் மண்டிக் கொண்டு வரும் வாசுவுக்கு.

நல்ல வேளை அவன் மனைவி தர்மா இது போல். வாயாடி இல்லை. இருந்தாலும் கொஞ்சம் அழுத்தம் உண்டு. அவளுக்குத் தன் ஓரகத்தியின் கத்தலும் ஏச்சும், பேச்சும் தினசரி பொழுதுபோக்கு. விசாலம், புருஷனை அர்ச்சனை செய்ய ஆரம்பித்தால், டீ. வி.யில் 'ஒலியும் ஒளியும்' இருந்தால்கூட 'பட்'டென நிறுத்தி விடுவாள் அவள். அத்தனை சுவாரஸ்யம்.

பாலு எதற்குத் திட்டு வாங்குவார் என்று சொல்ல முடியாது. நாலு நாட்களுக்கு முன்பு, பெண்டாட்டியைக் கலந்து ஆலோசிக்காமல், பக்கத்திலிருந்த மாரியம்மன் கோயில் திருவிழாவுக்கு ஒரு ரூபாய் நன்கொடை கொடுத்து விட்டார் என்று கண்ணில் விரலைக் கொடுத்து ஆட்டாத குறையாய்க் கேள்விமேல் கேள்வி போட்டுக்குடைந்தெடுத்து விட்டாள்.

''யாரைக் கேட்டுக் கொடுத்தேன்?''

''என்ன விசாலம்... ஏதோ கோவில், தர்ம காரியம்னு கேட்டான். சட்டைப் பையில ஒரு ரூபாய் இருந்தது.''

''சட்டைப் பையில் நூறு ரூபாய் இருந்தா அதை எடுத்துக் கொடுத்திருப்பேளாக்கும். பெரிய தர்மப் பிரபு. பாரி வள்ளலுக்கு ஒன்னு விட்ட தம்பி... பொழுது விடிஞ்சு பொழுது போனா ஆயிரம் பேர், ஏதாவது ஒரு கோயில் பேரைச் சொல்லிண்டு வந்துண்டுதான் இருக்காங்க. ஒவ்வொருத்தனுக்கும் ஒரு ரூபாய் நோட்டைத் தூக்கிக் கொடுங்கோ. உங்க ஒரு மாச சம்பளம் ஒன்றரை நாள்ளே காலி.''

''எல்லாருக்குமா தரேன்?''

''பேசாதீங்கோ. இதே வீட்டுல உங்க தம்பி இல்லே? அந்த ஆள் — மாரியம்மன் பேரைச் சொல்லிண்டு வந்தப்போ, உங்க தம்பியும்தானே உங்க பக்கத்திலே இருந்தார்? அவர் ஒரு பைசா நகர்த்தினாரா?''

''பெரியவன் நான் இருக்கச்சே அவன் எதுக்குக் கொடுக்கணும்? நான் வேற அவன் வேறயா?''

அவ்வளவுதான். விசாலம் புளிய மரத்தைப் பேய் பிடித்துக் கொண்டது போல் கணவனை வார்த்தைகளால் உலுக்கி எடுத்து விட்டாள்.

''உங்களுக்குச் சமர்த்துப் போறுது. உங்க வயசுக்காரா எல்லாம் சொந்தமா பிளாட் வாங்கி வீடு கட்டறா. நீங்க இப்படியே இருங்கோ. சுயமா புத்தியில்லேன்னாலும், ஒருத்தி சொல்றதையாவது கேட்கணும். அதுவும் கிடையாது. என் தலையெழுத்து. யாரைச் சொல்லியும் குத்தமில்லே. இப்படியொரு மனுஷனுக்கு வாழ்க்கைப்பட்டுத் தினமும் மல்லுக்கு நிற்க வேண்டியிருக்கு. கடைசியில நீங்க செய்யற தப்பெல்லாம் பிறத்தியாருக்குத் தெரியாது. நான் கத்தறது தான் தெரியும்.''

இப்படி நீளமாய்க் கத்தினாள். அன்று வாங்கிய மண்டகப்படியிலிருந்து பாலு—வாசற் கதவைத் திறந்து கொண்டு யார் வந்தாலும் தன் சட்டையை ஒரு கையால் கெட்டியாய்ப் பிடித்துக் கொண்டு நேரே உள்ளே போய் விசாலத்தின் எதிரில் நின்று விடுகிறார். அதற்கும் அவள் கத்தாமலில்லை.

''வாசல்லே யாரு?''

''தெரியல்லே. நீ போய்ப் பாரு.''

''அது சரி. வீட்டுல ஐயனார் சிலை மாதிரி புருஷனை உட்கார வெச்சுட்டு நான் போய்ப் பார்க்கறேன். அப்புறம், ஊரிலே எல்லாரும் 'அந்த வீட்டில அம்மாதான் எல்லாம்'னு பேசிக்கட்டும்.''

''அதுதானே நிஜம்?''

''என்னது? என்ன சொன்னேள்? நான் தான் இங்கே எல்லாரையும் அடக்க

றேனு... என்னைப் பார்த்துச் சொல்லுங்கோ...''

''எல்லாரையும்னு நான் எங்கே சொன்னேன் விசாலம்?''

''அப்ப உங்களை அடக்கறேன்னு சொல்றேன் இல்லையா... நீங்க பூடகமாப் பேசினு புரிஞ்சுக்க முடியாத அசடில்லே நான். அப்படி ஒண்ணும் எனக்கு அடங்கி நீங்க இருக்கணும்னு அவசியமில்லே. இந்த நிமிஷம் சொல்லுங்கோ. நான் வாயை மூடிக்கறேன். ஆனா ஒண்ணு. நானு இருக்கத் தொட்டு உங்களைக் கட்டிண்டு மாரடிக்கறேன். இன்னொருத்தியா இருந்தால் என்னிக்கோ போயிருப்பா....''

விசாலத்தின் வார்த்தைகள், தர்மாவின் உதட்டோரம் ஏளனச் சிரிப்பை உண்டு பண்ணும். அவள் வாசுவை அர்த்தத்துடன் பார்த்துச் சிரிப்பாள்.

வாசுவுக்கு நாக்கைப் பிடுங்கிக்கொள்ளலாம் போல இருக்கும்.

'அது என்ன ஒரு பெண் பிள்ளைக்கு இத்தனை திமிர்?'

இவளுக்கு என்ன குறை வைத்துவிட்டார் இந்த பாலு... இத்தனைக்கும், இவள் பெரிய இடத்துப் பெண் கூட இல்லை. விசாலம், புருஷன் வீட்டுக்கு வந்துதான் மின்சார விளக்கையே கண்ணால் பார்த்திருக்கிறாள். பாலுவை மணந்த பின்புதான் அவளுக்கென்று ஓர் அந்தஸ்து வந்து சேர்ந்தது.



கல்யாணமான புதுசில் காய்ந்த கருவேப்பிலைக் குச்சி மாதிரி இருப்பாள் இந்த விசாலம். அதற்கு நேர் எதிராய் வாட்டசாட்டமாய், சந்தனக் காப்பு சாற்றிய பெருமாள் மாதிரி இருப்பார் பாலு. எந்த விதத்திலும் பொருத்தமில்லை. இந்த இருபது வருஷங்களில் விசாலத்தின் கன்னத்துப் பள்ளம் மறைந்து, முகத்தில் ஒரு களை வந்திருக்கிறது என்பதைச் சொல்லத்தான் வேண்டும். இப்பேர்ப்பட்டவளுக்கு என்ன வாய்...

''உங்க அக்காவுக்குப் பொங்கல் பணம் பத்து ரூபாய் அனுப்பினேளா... முழிக்க வேண்டாம். போஸ்ட்மேன் என் கிட்டத்தான் மணியார்டர் ரசீதைக் கொடுத்துட்டுப் போனான். எப்பவும் அஞ்சு ரூபாதானே அனுப்பறது வழக்கம்? கையில காசு துள்ளறது போல இருக்கு...''

''இத்தனை வருஷமாறது. நல்ல காய்கறியாப் பார்த்து வாங்கத் தெரியல்லே. சொத்தையும் சொள்ளையையும் உங்க தலையில கட்டறதுக்காகவே கடைக்காரன் காத்துண்டிருக்கான். அதான் மூஞ்சியிலேயே எழுதி ஒட்டியிருக்கே, 'நான் ஏமாளி''ன்னு!''

''உங்களை யார் எனக்குப் புடவை வாங்கிண்டு வரச் சொன்னது? வயசானவ கட்டிக்கற மாதிரி ஒரு புடவையை எடுத்துண்டு வந்து நிக்கறேளே... ஊருல உலகத்துல என்ன ஃபேஷன், இந்தக் கலர் நம்ம பெண்டாட்டிக்கு எடுபடுமான்னு ஏதாவது யோசிச்சாத் தெரியும்....''

இப்படி எத்தனை எத்தனை... வாசு, அடிக்கடி அண்ணனிடம் ரகசியமாய்ச் சொல்வதுண்டு.

''நீ, மன்னிக்கு ரொம்ப இடம் கொடுத்துட்டே அண்ணா...''

''என்னை என்ன செய்யச் சொல்றே...''

''ஒண்ணும் செய்ய வேண்டாம். மன்னி பேசறப்ப, நீயும் கொஞ்சம் குரலை உயர்த்து போதும்.''

''எதுக்குடா... ரெண்டு கையையும் தட்டினாத்தானே சத்தம்? மேலும் அவ என்னமோ இப்படிக் கத்தறாளே தவிர மனசு நல்ல மனசுடா...''

''ப்ரெட், பன், கேக் தயாரிப்பாளர் புதுசாஒரு திரைப்படம்எடுக்கிறாராமே. படத்தின் பெயர் என்ன?''

''பேக்கரி ராஜா!''

—சுதாகரன்



''நீதான் மெச்சிக்கணும். இப்படியே போனா, நாளைக்கு உன் குழந்தைகள் கூட உன்னை மதிக்க மாட்டா...''

இதற்குப் பாலு பதிலேதும் சொல்ல மாட்டார். லேசாகச் சிரிப்பார். இதற்கு மேல் பேச வாசுவினால் முடியாது.

ஆனால் மனசுக்குள் ஏதோ அருவெறுப்புத் தட்டும். பெண்டாட்டியிடம் பிரியமும், மதிப்பும் இருக்க வேண்டியதுதான். அதற்காக இப்படியா... அப்படி என்னதான் இருக்கிறது இவளிடம்?

ஒரு முறை தர்மா கூட இவனிடம் சலித்திருக்கிறாள்.

''உங்க அண்ணாவுக்குப் பெண்டாட்டி இல்லாம ஒரு நிமிஷம் கூட இருக்க முடியாது... அதான் இப்படி....''

''ச்சீ, அசிங்கமாப் பேசாதே!''

''இதுல என்ன அசிங்கம்... சில ஆம்பிளைங்க இப்படித்தான். 'இந்தப் பித்து' இருந்தா எப்பேர்ப்பட்ட புத்திசாலி கூட பெண்டாட்டி முன்னாடி மக்கா, அசடா, தலையைச் சொறிஞ்சிண்டு நிக்க வேண்டியதுதான். மானம், ரோஷம் எதுவும் இருக்காது. எல்லாம் காத்துல பறந்துடும்.''

''எங்க அண்ணாவுக்கு நாற்பத்தியாறு வயசாகப் போறது. கல்யாணத்துக்குப் பொண் இருக்கா.''

''இதுக்கு வயசாவது ஒண்ணாவது? பார்க்கப் போனா வயசாக ஆகத்தான் இன்னும் அசடு வழிவா. எங்க அண்ணா சொல்வான்.''

வாசுவுக்கு மகா அவமானமாக இருக்கும். தர்மாவின் அண்ணா ஒரு டாக்டர். அதனால் அவன் சொல்வதற்கு அப்பீலே கிடையாது என்பாள் தர்மா.

இவள், தன் பிறந்த வீட்டுக்குப் போகும் போதெல்லாம் தன் டாக்டர் அண்ணனிடம் புகுந்த வீட்டு விஷயங்களைச் சொல்லுவாள் என்பதை நினைக்கையிலேயே வெட்கம் பிடுங்கித் தின்னும் அவனுக்கு.

பாலுவின் மகன், மகள்களுக்கு அப்பாவின் நிலைமை பரிதாபத்தை உண்டுபண்ணும் தான். ஆனால் அம்மாவை எதிர்க்கத் தைரியம் கிடையாது. எப்பொழுதாவது பெண்தான் துணிந்து ஏதாவது சொல்வாள்.

''ஏம்மா, அப்பாவைச் சும்மா திட்டிண்டே இருக்கே?...''

''சொல்லுவியே, உனக்கு இது மாதிரி ஒரு புருஷன் வரட்டும், அப்பத் தெரியும். ஆள்பார்க்க அம்சமா இருந்துட்டாபோதுமா? கொஞ்சமாவது சாமர்த்தியம் வேண்டாமா? ஏதோ, நான் இருக்கத்தொட்டு இந்தக் குடும்பம் இந்த மட்டும் நிமிர்ந்து நிற்கிறது. இல்லேன்னா உங்க அப்பாவோட சுபாவத்துக்கு, இத்தனை நாளைக்கு அவரை எல்லாரும் தரையில போட்டுத் தேய்ச்சுட்டுப் போயிருப்பா...''

இப்படி அவள் சொல்லும்போது பாலு மகளைப் பார்த்துப் புன்னகைப்பார்.

**அ**ன்றும் இது போல எதற்கோ விசாலம் கத்திக் கொண்டிருக்க, பாலு அவளது குறுக்குக் கேள்விகளுக்குப் பதில் சொல்லத் தெரியாமல் விழி பிதுங்கிக் கொண்டிருக்க...

ஆபீஸிலிருந்து அப்போழுதுதான் வந்த வாசுவுக்கு முகம் முழுக்கக் கடுப்பு.

வந்ததுமே மனைவியிடம் கேட்கிறான்:

''அண்ணா வந்தாச்சா?''

''உம். உள்ளே வழக்கமான டோஸ் கிடைக்கிறது..''

''அண்ணாவுக்கு வேணும்.''

''என்ன அதிசயம்... நீங்களும் மன்னி பக்கம் சேர்ந்தாச்சா...''

''சித்த இரு. இதோ வரேன்....''

வாசு, சட்டையைக் கழற்றி விட்டு, துண்டைத் தோளில் போட்டுக் கொண்டு, 'விடுவிடென' சாப்பாட்டுக் கூடத்துக்கு வர, பின்னாலேயே தர்மாவும் வருகிறான்.

''அண்ணா!''

''என்னடா?''

''போன செவ்வாய்க் கிழமை நீ எங்க ஆபீஸ் மானேஜரைப் பார்த்தியா...''

''யாரு, தோத்தாத்திரியையா... ஆமா. மாட வீதியிலே பார்த்தேன்.''

''அவர் கிட்ட என்ன சொன்னே?''

''என்னசொன்னேன்...மறந்துபோச்சே?''

''ஆமா, மறந்து போகாதோ... ஏதோ, அந்த மனுஷனைப் பார்த்தா ஒரு ஹலோ, இல்லே– ஒரு நமஸ்காரம்... போறுதோ... மன்னி சொல்றான்னு ஏன் சொல்ல மாட்டா''

''என்ன நடந்தது?'' விசாலம் இடை மறிக்கிறாள்.

''பாருங்கோ மன்னி. என் ஆபீஸ் மானேஜரைப்போன செவ்வாய்க் கிழமை அண்ணா பார்த்திருக்கிறான். 'வாசுவுக்கு என்ன உடம்பு ரெண்டு நாளா வரலேயே'ன்னு கேட்டிருக் கார். இவன், அவர் கிட்டப் போய்க் கண்டபடி உளறியிருக்கான். 'இந்தக் காலத்துப் பசங்க மெடிகல் லீவு போடறாங்கன்னா அது சினிமாவுக்கோ, பிக்னிக்குக்கோதான் இருக் குமே தவிர, நிஜமா உடம்பு சரியில்லாம இருக்காது. இதைப் போய் நம்பறேளே... வாசுவோட மச்சினனுக்குச் சீமந்தம்... ரெண்டு நாளா அங்கேதான் டேரா. ஹஹ் ஹான்னு சிரிச்சிருக்கான். ஆபீசுல இப்ப லீவே எடுக்க முடியாத டயம். ஆடிடிங் நடக்கிறது. ஆபீசர் என்ன நினைச்சுப்பார்... இன்னிக்குக் கூப்பிட்டுக் கண்டபடி பேசிட் டார் அவர்....'' வாசு, ஆத்திரத்துடன் பாலுவைப் பார்க்கிறான். விசாலத்தின் முகம் சுண்டிப் போகிறது.

''பேசத் தெரிஞ்சாப் பேசணும். இல்லே, பேசாம இருக்கணும். என்னமோ தனக்குத் தான் பேசத் தெரியும்கற மாதிரி இப்படி அசடு வழியணுமா... இல்லே, மனசுல அரிச்சந்திரன்னு நினைப்பா...'' வாசு தொடர, பாலுவின் மகன் மோகன், தனக் குள் முணு முணுக்க,

''ஏம்பா இப்படிப் பேசினேள்...''

மகள் ப்ரியா, தந்தையைச் சலிப்புடன் கேட்க...

''யார் கிட்ட நிஜம் பேசணும்... எப்ப பொய் சொல்லணும்கறது கூடவா ஒரு மனு ஷருக்குத் தெரியாது?''

தர்மா சமையலறையில் பாத்திரத்தை 'நக்'கென வைக்க... சீறிக் கொண்டு கிளம்புகிறாள் விசாலம்.



''டாக்டர் இப்போது வரமுடியாதாம். ரொம்ப பிஸியாய் இருக்காராம்.''

நோயாளி: ''ஹும்... நானாகவே சாக வேண்டியதுதானா!''

—ஊமை அ. கதிர்வேல்

''என்ன ஆளுக்கு ஆள் பேசறேள்? அவர் உங்களையெல்லாம் விடப் பெரியவர். அதை மறந்துடாதீங்கோ. ஆபீசர் கிட்ட ஒரு மாதிரியும், அடுத்தவன் கிட்ட ஒரு மாதிரியும் பேச அவருக்குத் தெரியாது. உங்களைப் போல ஒண்ணுமில்லாததுக்கெல்லாம் பொய் சொல்லி, அவருக்குப் பழக்கமில்லே. ஏதோ இவரை மாதிரி ஒரு அரிச்சந்திரன் இருக்கிற தாலதான் இந்த வீடு இத்தனை சுபிட்சமா இருக்கு.''

''மன்னி....''

''அண்ணாவுக்கு மதிப்புக் கொடுக்காதவர் என்னை எதுக்கு மன்னின்னு கூப்பிடணும். உங்க அண்ணா இல்லேன்னா இன்னிக்கு நீங்க எல்லாம் இப்படித் தலையை நிமிர்த்திண்டு நடக்க முடியாது. அது மாத்திரம் நினைப்புல இருக்கட்டும். அன்னிக்குக் கல்யாணமாகி வந்தப்பவே சொல்லிட்டார். 'நீ என்ன சொன்னாலும் கேட்பேன். ஆனா இந்தக் குடும்பத்தை ரெண்டாப் பிரிக்கணும்னு மட்டும் சொல்லாதே. நான் உன்னை அடிச்சு வெளியே விரட்டிடுவேன்'னு சொன்னவர் அவர்.... அப்பேர்ப்பட்டவரை அசடுன்னு சொல்ல உங்க எல்லாருக்கும் எப்படி மனசு வந்தது... ஏண்டி ப்ரியா, சித்தப்பா சித்தி சொல்றது இருக்கட்டும். நீயும் மோகனும் எப்படிச் சொல்லலாம்? அவர் உங்களைப் பெத்தவர் இல்லேயோ... தெய்வத்துக்குச் சமானமானவர் இல்லேயோ... தமக்காக ஒரு பைசா செலவழித்ததில்லே அவர்... அவரைப் பேச உங்களுக்கெல்லாம் என்ன அருகதை இருக்கு...''

விசாலம் முகத்தை மூடிக் கொண்டு 'முசுமுசெ'ன்று அழுகிறாள்.

வாசு, ஆபீசரை மறந்து விசாலத்தை வெறிக்க, மற்றவர்கள் பாலுவையும் விசா லத்தையும் மாறி மாறிப் பார்க்க....

பாலு மௌனமாய்.... இதழ்க்கடையில் அதே மெலிதான புன்னகை...

'எப்ப பெண்டாட்டியை அடக்கணும், எப்ப அவளுக்கு நான் அடங்கணும்னு எனக் குத்தாண்டா தெரியும்... போங்கடா அசட் டுப் பசங்களா...' – என்பது போல அந்தச் சிரிப்பு அவர்களைக் கேலி செய்கிறது.

# நீரைக் கொதிக்க வைத்தல், பாட்டிலை கிருமி நீக்கம் செய்தல், வெப்பநிலை சோதனை செய்தல்—ஆகிய பிரச்சினைகள் இல்லை.

புதிதாகப் பிறந்த குழந்தை உணவைப் பெற்றிட எத்தகைய சுலபமான, வசதியான, இயல்பான வழி இருக்கிறது பார்த்தீர்களா? ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக இயல்பாக நடந்த நீண்ட சோதனை கணிப்பின் மூலம் இயற்கை கண்டு கொண்டுள்ளது:

குழந்தைக்கான தாய்ப்பாலை உன்னத உணவாக்குபவை அதில் இயல்பாக சரிவிகிதமாகக் கலந்துள்ள உடல் வளர்ச்சிச் சத்துக்கள் (புரதம்), சக்திதரும் சத்துக்கள் (கார்போஹைட்ரேட்டுகள், கொழுப்பு) ஆரோக்கியமான பாதுகாப்புச் சத்துக்கள் (வைட்டமின்கள்) ஆகும்.

## தூய்மைக்கேடு பிரச்சினை இல்லை.

உங்கள் குழந்தை, முலையிலிருந்து பாலை நேரடியாக குடிப்பதால் தூய்மைக்கேடு ஏற்படும் அபாயம் அதில் இல்லை, தயாரிப்பு அல்லது பாலின் வெப்ப நிலையை சோதித்தல் போன்ற பிரச்சினைகளும் அதில் இல்லை.

அத்துடன் வயிற்றில் வாயுக் கோளாறுகள் மற்றும் இதர நோய்களிலிருந்து உங்கள் குழந்தையை பாதுகாத்திட தாய்ப்பாலில் நோய் எதிர்ப்புப் பொருள் இயல்பாகவே உள்ளது—இன்னும் இதர நன்மைகள் கூட அதிலே—உதாரணம் புளிப்பைத் தடுத்திட வைட்டமின் 'சி'.

முலைப்பால் உண்ட குழந்தை பாதுகாப்பும் தன்னம்பிக்கையும் பெறுகிறது, காரணம் நீங்கள் குழந்தையை அரவணைத்து பாசத்தையும் சேர்த்தல்லவா பாலூட்டுகிறீர்கள்.

## நாளும் பிரபலமடைகிறது

அதன் ஊட்டச்சத்து மற்றும் இதர நலன்கள் விரிவாகவும் அதிகமாகவும் உணரப்படுவதால் மேலை நாடுகளிலும் கூட முலைப்பால் கொடுத்தல் மிகவும் அதிகமாக பிரபலமாகி வருகிறது.

உங்கள் உடல் நல பாதிப்பு அல்லது பால் பற்றாக்குறை ஆகியவற்றால் நீங்கள் குழந்தைக்கு பால் கொடுக்க முடியாமல் போனால் என்ன செய்வது?

உங்கள் குழந்தைக்கு நீங்கள் சிறந்த 'தாய்ப்பால் மாற்று' தேர்ந்தெடுக்க வேண்டும்.






## ஸ்ப்ரே ட்ரை செய்யப்பட்ட அமுல் ஸ்ப்ரே

அமுல் ஸ்ப்ரே-நன்கு சமச்சீராக் கலக்கப்பட்ட சத்துக்களுடன் கூடியது—பிரதம தரமுள்ள புரதம், ஜீரணிக்க எளிதான கொழுப்பு மற்றும் கார்போஹைட்ரேட்டுகள், சரியாகக் கலந்துள்ள வைட்டமின்கள் மற்றும் தாதுக்கள்.

ஏற்கனவே கொதிக்க வைத்த வெதுவெதுப்பான நீரில் அதைக் கலப்பது எளிது, முன்னாலேயே அதை பசை போல் தயாரிக்க வேண்டிய அவசியம் இல்லை.

## சிக்கனமானது

டின்னில் அடைக்கப்பட்டுள்ள குழந்தை உணவுகளில் மிகவும் சிக்கனமானது, அமுல் ஸ்ப்ரே. காரணம், அது இந்தியாவின் 'வெண்மைப் புரட்சிக்கு' முன்னோடியான நவீன பால் நிறுவனத்தால் தயாரிக்கப்பட்டுள்ளது.

ஆனால் கொதிக்க வைத்த நீர், சுகாதார முறையில் கிருமி நீக்கம் செய்யப்பட்ட பாத்திரங்கள் மற்றும் பால் புட்டிகள் உபயோகித்தலை உறுதி செய்து கொள்ளுங்கள். பால் கலக்கப்படும்போது அதிகம் நீராகி விடுவதைத் தவிர்ப்பதற்கும், போதுமான ஊட்டச் சத்துக்களை உறுதி செய்வதற்கும் டின் மீது குறிப்பிட்டுள்ள வழி முறைகளை கவனமாக பின்பற்றுக.

இலவசம்! அமுல் வளர்ப்பு வழி—
இதில் அடங்கியுள்ளவை: கருத்தரித்தல், பேறு காலத்திற்கு முன் கவனிப்பு, பிரசவம், தாய்ப்பால் ஊட்டுதல், வெளியில் கிடைக்கும் உணவு வகைகள், லேசான தானிய உணவு தருதல், குழந்தையின் அன்றாடக் கடன்கள், குழந்தையின் வளர்ச்சி, நோய்த் தடுப்பு, முதலுதவி, பொதுவான நோய்கள், நோயுற்ற குழந்தையைப் பாதுகாத்தல், ஆங்கிலம், இந்தி, மராத்தி, குஜராத்தி, தமிழ், தெலுங்கு, மற்றும் மலையாள மொழிகளில்.

உங்கள் பெயர், மற்றும் முகவரியுடன் ரூ. 1.25 தபால்தலை வைத்து எழுதுக இம் முகவரிக்கு: தபால் பெட்டி எண் 10124, பம்பாய் 400 001.

உங்கள் குழந்தையின் ஆரோக்கிய ஆர்வத்தில் ஒரு நற்செய்தி வழங்குகின்றனர்.
அமுல் ஸ்ப்ரே தயாரிப்பாளர்கள்.

# அமுல்ஸ்ப்ரே

இந்தியாவின் முன்னணி பால் நிறுவனத்தின் தயாரிப்பு.



குஜராத் கோ-ஆப்பரேடிவ் மில்க் மார்க்கெட்டிங் ஃபெடரேஷன் லிமிடெட், தபால் பெட்டி எண்.10, ஆனந்த் 388 001 குஜராத் மாநிலம்.




ASP/AS-2/83

# நடிக்க மறுத்த உணர்வுகள்

**வி**டிந்து விட்டது.

அலாரம் பெல்லும் அடித்து ஓய்ந்துவிட்டது.

நர்மதா விழிக்கக் காணோம்.!

அறைக் கதவும் திறக்கக் காணோம்...

செக்ரட்டரி ரர்ம்குமார் கை அக்குளில் கால்ஷீட் ஃபைலோடு பரபரப்போடு காணப்பட்டான். நர்மதாவின் வயலட் பூஞ அறைக் கதவின் முன் வட்டமடித்து வட்ட மடித்துக் கால் மூட்டே கழண்டு போகும் போல் தோன்றியது.

'காமர்'சில் பட்டம் வாங்கிவிட்டு இந்த மாதிரி வேலைக்கெல்லாம் வந்தால் இப்படித் தான்....' — மனத்தின் ஓர் ஓரம் பழித்தது.

'கதவைஒரே தட்டாய்த்தட்டி நர்மதாவை எழுப்பினால்? — கேள்வி மனத்தில் பிறந்த மறு விநாடியில் மூளை 'முண்டம்' என்றது. 'இதற்கு முன் இதுபோல் நடந்து கொண்டு வட்டில் வட்டிலாக வாங்கிக் கட்டிக் கொண்டது அதற்கு மறந்து விட்டதா என்று பதில் கேள்வி போட்டது.

''யோவ்... என்னய்யா இது? காலைல' ஏழு மணிக்கெல்லாம் அவுட்டோர் இடத்துக்கு வந்துடணும்னு படிச்சுப் படிச்சுச் சொன்னேன்ல? மணி ஏழரை ஆகப் போகுது. என்னய்யா பண்ணுது நர்மதா?'' என்று ஃபோனில் புரொடக்ஷன் மானேஜரின் அலறல்.

''தூங்குது!''

''நீ என்னத்துக்கய்யா இருக்கே... பத்தி இங்கவா? எழுப்பி இழுத்துக்கிட்டு வர வேண்டியதுதானே... இங்கே யூனிட்டே ஹீரோவோட காத்துக்கிட்டிருக்குய்யா...''

—ராம்குமாருக்கு வலித்தது. அழுகை வரட்டுமா? என்று கேட்டது. 'ஆயிரம் ரூபாய் சம்பளம் வாங்கி என்ன பயன்? வீடு வாசல் என்றில்லாமல் இவளோடேயே கிடந்து. இவளோடேயே நடந்து. இவளுக்கு முன்னால் எழுந்து. இவளுக்குப் பின்னால் உறங்கி... சை!' — சலிப்போடு கதவை உதைக்கக் காலைத் தூக்கினான் ராம்குமார்.

''என்னய்யா இது... கை இருக்கும்போது காலால எத்திக்கிட்டு?'' — குரலோடு வந்தவன் மகேஷ். நர்மதாவின் கணவன் அல்லது காதலன் அல்லது நண்பன்! — ராம்குமாருக்கே அவன் யார் என்பது புரியாத ரகசியம்.

''ஏன் வழியறே... ஷூட்டிங்குக்குப் பொறப்படாமல் தூங்கிட்டு இருக்காளா நர்மதா?''

தலையை ஆட்டினான் ராமகுமார்.

''அதான் உன்னைப் பார்த்தாலே தெரியுதே... தொழில்பேர்ல அவளுக்குத்தான் எவ்வளவு அக்கறை. ஏய் நர்மதா...நர்ம்...''

மகேஷின் கட்டைக் குரல் நர்மதாவின் உறக்கத்தைக் கலைத்தது.

''நாள் பூரா மாடா, கொதிக்க எரியற விளக்குகள் முன்னாலே உழைச்சுக் களைச்சு வர்றேன். நாலு மணி நேரம் கூடத் தூங்கலைன்னா எப்படி?''

விரக்தியோடு கேட்பாள். விளக்கம் சீனியைத் நடவிக் கொண்டு வரும்.

''காத்துள்ளபோதே தூத்திக்கணும். காசுக்காக அவனவன் பிச்சையே எடுக்கிறான். நீ தூக்கத்தைப் பத்திப் பேசறே! யாருக்காகச் சம்பாதிக்கச் சொல்றேன்? எல்லாம் நம்ப பிற்காலத்துக்காகத்தானே? சதையிலே சுருக்கம்விழுறதுக்குள்ளே நீ சேர்க்கவேண்டியதைச் சேர்த்துடணும். பின்னாலே நம்மளை நாய் கூடச் சீந்தாது தெரிஞ்சுக்கோ....''

அவள் வாயடைத்துப் போவாள். அவனுக்குக் காசில்தான் சகலமும் இருக்கிறது என்பது அவளுக்குள் புரிந்தும் கரைந்தும் கசிவும்போய்விட்ட நிஜம். 'காசே வாழ்க்கையில்லே!' என்று ஒரு நாள் விவாதிக்கப்போய் அவன் சாட்டையைச் சுழற்றிக் கொடுமைக்குத் தோரணம் கட்டிய நிகழ்ச்சி அவளைத் தூக்கி நெருப்பில் போட்டது.

''மசமசன்னு நிக்காம மளமளன்னு புறப்பட வேண்டியதுதானே?'' — கடுகடுத்தான்.



அவள் பாத்ரூமைப் பார்த்து நடந்தாள். பாத்ரூமின் கதவை அவள் தொட்டபோது கன்னத்தைத் தொட்டது கண்ணீர்.

'ஐந்து வருஷமாய் இது போல் அழுது வடித்த கண்ணீர் ஒரு கிணறு கொள்ளும். இறைவா! விமோசனம் எப்போது?'

கேவலுடன் நினைத்தபடி பாத் டப்பில் விழுந்தாள். வெளியே ராம்குமார் அவளுக்காகப் பரிதாபத்தின் உச்சியில் இருந்தான்.

''பாவம் மேடம். வீட்டுக்கு வெளியே ஊரே கொண்டாடற இவங்களுக்கு வீட்டுக்குள்ற மட்டும் ஒரே திண்டாட்டமா இருக்கு. இந்த மகேஷ் நாசமாப் போக... யார் இவன்? நாம் ஏன் இவனுக்கு நடுங்கணும்?''

''புருஷன் மாதிரி'' — என்று சமையல்காரி சொன்னது நினைவுக்கு வந்தது. நர்மதாவும் அலங்காரத்துக்குள் அடங்கி வெளியே வந்தாள்.

**வா**சலில் கருநீல பென்ஸ். முகப்பில் வெள்ளை யூனிஃபாமில் டிரைவர். அவனுக்கு மிக முன்னால் ஆயாவுடன் ப்ரியா.

ப்ரியாவைப் பார்த்த நர்மதாவின் விழிகள் குளமாயின.

''ஆன்ட்டி....'' — ஓடிவந்து காலைக் கட்டிக்கொண்டாள் ப்ரியா.

''ஆன்ட்டி ஷூட்டிங் போறேன். சாயங்காலம் பார்க்கலாம். வரட்டுமா?'' — ஏக்கப் பாக் குறையாகக் கேட்டாள். அந்தப் பிஞ்சு ஏக்கத்துடன் தலையை அசைத்தது. விழிகள் எதையோ கேட்டன.

நர்மதா காரில் ஏறுமுன் ப்ரியா ஆயாவைப் பார்த்துக் கேட்டாள்.

''ஆயா, எங்கம்மா எப்ப ஊர்ல இருந்து வருவாங்க? நான் அவங்களைப் பாக்கணும். இந்த ஆன்ட்டி சுத்த மோசம். என்னைத் தூக்கிக்கவே மாட்டேங்கறாங்க....''

அதுவரை சதைப் பொருளாய் ஆடிக் கொண்டிருந்த நர்மதாவின் இதயம் க்ஷணத்தில் இரும்பானது. கருநீல பென்ஸின் கருநீல ஆசனத்தில் மரமாட்டம் சாய்ந்தாள். பென்ஸ் சாலையில் வழுக்க ஆரம்பித்தது.

நர்மதாவுக்குச் சிரிப்பும் அழுகையும் மாறி மாறி வந்தன. ஒரு பணப் பிசாசுக்கு நல்ல அழகோடும், இளமையோடும், மாலையிட்டு, ஒரு பிள்ளையையும் பெற்றுக் கொண்டு விட்ட தன்னை நொந்து வெதும்பினாள். இருபத்தி இரண்டு வயதில் அன்றே இரண்டைக் குறைத்து அதையும் தாண்டாதவளாகக் காட்டியவன் பெற்ற குழந்தையைக் கூட மூன்று மாதத்தில் பிரித்து ரசிகர்கள், பத்திரிகையாளர்கள், படாதிபதிகள் என்று சகலருக்கும் அவளைக் கன்னியாகவே காட்டி விட்டான்!

ப்ரியாவின் பிறப்புக்குப் பிறகு இப்படியும் அப்படியுமாக எப்படியோ வந்த சினிமா வாய்ப்பும் காசும் மகேஷுக்குப் புதிய



ருசியைக் காட்டியதன் விளைவு அவள் சிலரைத் தவிரப் பலருக்குக் கனவுக் கன்னி!

ஆரம்பத்தில் திரைஉலகில் அவளை நுழைக்க மகேஷ் அப்படிப் போராடியிருக்கத் தேவையில்லை....

''மாராப்பை இறக்கிக்கொள். கண்டுக்க மாட்டேன். தொப்புளுக்குக் கீழே சேலை இருக்கட்டும். எனக்குக் கவலை இல்லை...'' என்று சமாதான வர்ணம் பூசி அவளைத் தேற்றி....

அவனுக்கு ரொம்பச்சீக்கிரத்திலேயேஅனைத்தும் வெறுத்து விட்டது.

பிரியாவை நெருங்கிப் பழகக் கூட விடாத மகேஷை நினைக்கும்போதோ உடம்பெலும்புகள் அவ்வளவும் தீத் துண்டாகி விடுகிறது.

''நெருங்கிப் பழகி நீ காட்டற பாசம் நாளைக்கு உன் தொழில்ல மோசத்தை உண்டு பண்ணிடும். பிரியா எங்கேயும் போயிடலே. கவலைப்படாம மார்க்கெட்ல கவனமா இரு. ஊருக்குத் தெரிஞ்சா பொழைப்பு அதோ கதிதான்...''

இப்படிச் சொல்லிச் சொல்லி...

---

# தலைமகன்

**வை**ரக் கடத்தல் வியாபாரம்—
சூதாடி நண்பனின் தோல்வி—
மகன் அடகு — வீண் விரோதம்—
போலீசுக்குக் காட்டிக் கொடுத்தல்—
பழிக்குப் பழி — மகனே எதிரி—
அப்பாவுக்குத் திடீர் யோகம்—
லட்சாதிபதி.
மகனுக்கு அப்பாவைத் தெரியாது.
தம்பிக்கு அண்ணனைத் தெரியாது.
டமால் — டுமீல் — மோதல்
க்ளைமாக்ஸில் உறவு தெரிகிறது.
'தலைமகன்' சாவு.
சுபம்!
பெருமூச்சு.

கதை புரிந்திருக்கும். புரியாதவர்கள் வந்து போன பல கடத்தல் சினிமாக் கதைகளை நினைவுபடுத்திக் கொள்வார்களாக!

**அப்பா:** சந்திரஹாசன் (ஆமாம், கமலுக்கு அண்ணாதான்) இவரை தா. மு., தா. பி. என இரண்டு வகையாகப் பிரித்து விமர்சிக்கலாம். தா. மு. தாடி வைப்பதற்கு முன்பு தா. பி. தாடி வைத்த பிறகு. முன்னது பாவம்! பின்னது ஓ.கே.



**கடத்தல்காரன்:** சுதர்ஸன் பாவம்! கடத்தல் கொலை, கொள்ளை இவற்றின் டிரேட் மார்க்காக மட்டுமே இவரைப் பயன்படுத்திக் கொண்டு வருகிறார்கள். இதில் பெரிய முத்திரை, ஓங்கிக் குத்தியிருக்கிறார். எதிரிகளைக் குத்துகிற மாதிரியே!

**மூத்த பிள்ளை:** பிரபு. உடம்புக்குப் பொருத்தமான வேடம். இப்படி இரண்டு படங்களில் சண்டை போட்டால், தயிர் வடை தேசிகனைப் போல் இளைக்கலாம்! அத்தனை கஷ்டப்பட்டுச் சண்டைக் காட்சிகளில் உழைத்திருக்கிறார். கடைசியில் உயிர் விடும்போது காலை வழித்துக் காட்டுகிறாரே அந்த இடத்தில் அப்பாவை அப்படியே!.... வெல்டன் பிரபு!

**இளைய மகன்:** சுரேஷ். எந்தப் படத்தில் வந்தாலும் ஒரே மாதிரி தெரிகிறார். விஜயசாந்தியைக் காதலிக்கிறார். நன்றாக டான்ஸ் ஆடுகிறார். பாபுவோடு மோதுகிறார். விமர்சனங்களைப் படித்து ரோஷம் வந்து விட்டதோ?

**மனோரமா:** 'நெஞ்சங்கள்' படத்தில் நடித்த அதே செட் அப். அதே பாவ்லா. அதே 'இரண்ய வதம்' நாடகத்தின் மூலம் நேரத்தை வதம் செய்கிறார். குப்பத்துராணி!

**சாருஹாசன்:** ஒரே ஒரு பிளாஷ் பேக்கில் வந்தாலும் வலிப்புக் காட்சியில் நடித்திருப்பதை மறக்க முடியவில்லை.

**ஜூடோ ரத்தினம்:** பலே மாஸ்டர்! பரந்தாமன் பல அவதாரம் எடுத்த மாதிரி பிரபுவுக்காகச் சண்டையில் பல ஆயுதங்களை எடுத்துள்ளார். கம்பு, மின்சார பட்டாச் சுருள்; டிசைன் செய்யப்பட்ட சூலாயுதம் எக்ஸட்ரா, எக்ஸட்ரா.... பாம்பு உட்பட! இன்னொரு பாயும் புலி!

**இசை:** சங்கர் கணேஷ். முன்பு இவரே இசை அமைத்த பல பாடல்களின் நெடி 'கம்'மென்று அடிக்கிறது. என்றாலும் கேட்கலாம்.

**கதை,வசனம்,டைரக்ஷன்:** விஜயசந்தர். வியாபார ரீதியில் படம் எடுக்கத் தெரிந்திருக்கிறார். மூச்சுக்கு ஒரு நடனம் அல்லது சண்டையைப் புகுத்திப் படத்திற்கு எப்படியோ விறுவிறுப்புக் கூட்டியிருக்கிறார்.

**-திரைஞானி**



ஓடிவாங்க! டிக்கெட் மலிஞ்சிருச்சி!

ராமநாதபுரம் மாவட்டம் அருப்புக்கோட்டை பஸ் நிலையத்தில் இருந்து விருதுநகருக்குச் சில தனியார் பஸ்கள் புறப்படும்போது பஸ் ஏஜண்டுகள் சிலர் ஓடிவந்து பிரயாணிகளை இப்படிக் கூப்பிடுகிறார்கள்:

''நம்ம பஸ்ஸுக்கு வாங்கண்ணே! டிக்கட் ஒரு ரூபாதான்... மலிஞ்ச ரேட் ஒரு ரூபாதான்.''

அருப்புக்கோட்டையிலிருந்து விருதுநகருக்குச் சாதாரணமாக டிக்கெட் ரூ. 1.50 ஆகும். ஆனால் போட்டியில் சில பஸ்களில் ஐம்பது பைசா குறைத்து டிக்கெட் வசூலிக்கிறார்கள்.

—கமுதி திராவிடமணி

ஸ்டுடியோ வந்து விட்டது. புரொடக்ஷன் மானேஜர் ஓடிவந்து கதவைத் திறந்தார்.

யூனிட்டே மின்சாரம் பாய்ந்த சூட்டுக்கு வந்தது. அவளும் அரிதாரத்துக்குள் அடங்கி வசனகர்த்தாவிடம் காதைக் கொடுத்தாள்.

''மேடம் இன்னிக்கு எடுக்கப் போற ஷாட் படத்தோட க்ளைமாக்ஸ் ஷாட். இதுவரைக்கும் நார்மலா போய்க் கிட்டிருந்த உங்க காரெக்டர் கொதிச்சு வெடிச்சுப்போகப் போறது இந்த க்ளைமாக்ஸ்லதான்...

''நீங்க ஒரு குழந்தைக்குத் தாய்ங்கிற விஷயம் வெளிய தெரிஞ்சா நீங்க ஒருவனால கெடுக்கப்பட்டு, ஏமாந்த நிஜம் வெளியே தெரிஞ்சிடும்னு உங்கப்பா உங்க குழந்தையைப் பார்த்து உங்களை அம்மான்னு கூப்பிடக் கூடாது, சித்தின்னுதான் கூப்பிடணுங்கறாரு. அவர் சொன்னபடியே குழந்தை கேட்குது. அதைக் கேட்டுத் துடிக்கிற நீங்க அப்படியே உயிரை விட்டுட்றீங்க! இதுதான் ஷாட்!''

நர்மதாவுக்குத் தொண்டையே முள்ளானது. முன்னமேயே உடம்பை ஆக்கிரமித்திருந்த சோர்வும் வேதனையும் தங்களை இரண்டால் பெருக்கிக் கொண்டன.

வசன கர்த்தாவையும் டைரக்டரையும் அழாக் குறையாகப் பார்த்தாள்.

டைரக்டர் பேசினார்:

''நர்ம்... இது ஒரு சூபர் ஷாட்! நிச்சயம் நம்ம நாட்டுப் பெண்மணிகளை உருக்கப்போற இடம் இது. நம்ப பண்பாடு கெடாதபடி காட்சியை எடுத்துக் கதையை முடிக்கப்போறேன்.... உன் ஆக்ஷன்லதான் எல்லாம் இருக்கு. வழக்கம்போல் பிச்சுக் கட்டு...''

நர்மதா ஏதும் பேசவில்லை. காட்சியில் கரைந்தாள். காமிரா ஓடியது. எங்கும் அமைதி.

அப்பாக்காரர் இரைகிறார். இவளும்! இடையே குழந்தை 'சித்தி' என்கிறது.

''அப்படிச் சொல்லாதே... நான் உன் அம்மா... என்னை அம்மான்னு கூப்பிடு.''

''மாத்தேன். நீ என் சித்தி...''—குழந்தை

''அம்மான்னு கூப்பிட்ரு ராஜா...''

''மாத்தேன். என் அம்மா செத்துட்டதா தாத்தா சொன்னாங்களே.''

''அது பொய். நான் இவ்வளவு நாள் வெளியூர்ல இருந்ததுனாலே உனக்குத் தெரியல. நான்தான் உன் அம்மா...''

அந்த இரண்டு வயதுக் குழந்தை திக்கியது. திணறியது.

''தாத்தா இவங்க என் அம்மாவா?''

''அவ கிடக்கிறா கண்ணு... அவள் உன் சித்தி'' — அவர்.

''ஐயோ அப்பா... எனக்கு இன்னொரு கல்யாணம் வேண்டாம். வாழ்க்கை வேண்டாம். என் குழந்தை 'அம்மான்னு' என்னைக் கூப்பிட்டாப் போதும். நான் பெத்ததுக்கு நான் சித்தியா? என்ன கொடுமை....''

''சும்மா இரு... என்னை மீறிக் காதலிச்சுக் கெட்டொழிஞ்சது போதும். சொன்னதைக் கேளு....''

''என்னால முடியாது. எனக்கு அதுக்கான பக்குவம் இல்லை. வாழ்க்கை மாத்திப் போட்டுக்கச் சட்டை இல்லை யாது. கண்ணு! என்னை அம்மான்னு கூப்பிடு. என்னை அம்மான்னு கூப்பிடு...''

கேமிரா கோணத்தை மாற்றிக் கொண்டு மறுபடியும் ஓட விளக்குகள் மாறி மாறி அணைய அனைவரும் காட்சியில் கலந்து சிலிர்த்து நிற்க டைரக்டரின் எதிர்பார்ப்பை மீறி நர்மதா எங்கோ போய்க் கொண்டிருந்தாள்.

அது நடிப்பல்ல; அவளின் இதயக் கொதிப்பு என்பது யாருக்கும் தெரிய, புரிய வாய்ப்பில்லை!

எதிரே நர்மதா காட்சிப்படி இறந்து விழுந்தாள். காமிரா ஓடியது போதும் என்று நின்றது.

எல்லோரும் சுய நிலைக்குத் திரும்பக் கொஞ்சம் அவகாசம் பிடித்தது. டைரக்டர் பெருமிதத்தோடு மார்பை நிமிர்த்தி நடந்தபடி நர்மதாவை நெருங்கினார்:

''வெரி குட் நர்மதா... வெரி குட்... இன்னிக்கு உன் பர்ஃபாமென்ஸ் டக்கர். என் எதிர்பார்ப்புக்கு மேலே போயிடிச்சு உன் நடிப்பு...''

நர்மதாவிடமிருந்து எந்த விதமான பதிலும் இல்லை. டைரக்டர் தயக்கத்தோடு மல்லாந்த நிலையில் இருக்கும் அவளைத் தொட்டார்.

கைகளைச் சில்லிப்புக் கவ்வியது.

நர்மதா நடிக்கவில்லை! நிஜமாலும் துடித்திருக்கிறாள் என்பது புரிந்தது.

அவர் அப்படியே நொறுங்கிப் போனார்.

# 'வீடியோ'வரை காத்திரு! 10

கதை: ஜே.எஸ்.ராகவன்  சித்திரம்: செல்லம்
















ஆமாண்டா! என் பையன் சுரேஷ் உன் பொண்ணை லவ் பண்றானாம்.
அப்போ, சுரேஷ், உன் பையன் தானா!


ஏன்? யாராவது இல்லேன்னுங்களா? ...ஜூஜி சொல்லிடுச்சா. என் பையன் கொழும்பு போறதுக்கு முன்னே கன்று சொல்லிட்டான்!
என்னது? சுரேஷும் கொழும்பு போயிருக்கானா?


ஆமாம் முக்கிய வேலையாத்தான். 'வீடியோ' புடிச்சின்டு வர....
என்னது? என்ன சொன்னே?


என்னடா திரும்பித் திரும்பிக் கேக்கிறே... ஏதோ 'வீடியோ'ன்னு தெரியாத மாதிரி தமாஷ் பண்றியே....
ச...சங்கு ச...ரோஜா எனக்குத் திடீர்னு நெஞ்சை அடைக்குது....


வீராசாமி தடாலென்று சோபாவில் சாய்கிறார்.
என்னங்க? என்ன செய்யுதுங்க? ஐயோ... பயம்மா இருக்கே....
வீராசாமி! வீராசாமி!! ...ஏம்மா சட்டு கொஞ்சம் தண்ணி கொண்டாங்க.


அவசரமாக வீராசாமியை செக் செய்கிறார்.
மார்லே எங்கே தேடினாலும் 'லப்டப்' சத்தத்தைக் காணுமே... ஐயையோ!...என் சோதனையிலேயே கிடைக்கலேன்னு வேறு யார் தேடினாலும் கிடைக்காதே... மை காட்!... வீராசாமி போயிட்டானா? முருகா! என்ன சோதனையப்பா இது?
தொடரும்



# "திருமணம் என்பது பொம்மைக் கல்யாணம் அல்ல"

"திருமணம் என்ற பெயரில் விவரம் அறியா சிறுவன், சிறுமியை இணைக்கும் திருமணம் — கடவுளுக்கும், மனிதனுக்கும், எதிரான ஒரு குற்றமாகும்".

அண்ணல் காந்தியடிகள்



சின்னஞ் சிறுவயதில் இளையோரை இணைத்து வைக்கும் திருமணத்தை ஒழிக்க காந்தியடிகள் முதலாக அறிஞர்கள் பலர் போராடினார்கள்.

உடலும், உள்ளமும் வளர்ச்சி பெறாத சின்னஞ்சிறு வயதில் திருமணம் செய்துவைக்கும் கொடிய பழக்கம்தான் "இளையோர் திருமணம்".

கணவனை நம்பியே வாழும் நிலைக்கு இச்சின்னஞ் சிறுமியர் தொடக்கத்திலேயே ஆளாக்கப்படுகிறார்கள். இளம் வயதில் குழந்தை பெறுவது உடலுக்கும், உயிருக்கும் இடையூறானதாகும். இளம் வயதில் கைப்பிடித்த சிறுவன் இறக்க நேரிட்டால் வாழ்நாள் முழுவதும் விதவையாகவே அச்சிறுமி வாழ வேண்டும். அல்லது "சதி" என்னும் உடன் கட்டை ஏறும் கொடிய வழக்கத்திற்கு அவள் இரையாக வேண்டிய கட்டாயமும் அந்நாளில் இருந்தது.

இக் கொடிய வழக்கத்தை ஒழித்து மகளிர்க்குச் சமுதாயத்தில் உரிய இடத்தினை வழங்கிட "சதி ஒழிப்பு" என்னும் சீர்திருத்த இயக்கத்தினை இராஜாராம் மோகன் ராய் முன்னின்று நடத்தினார். "சதி" முறை 1829ல் ஒழிக்கப்பட்டபின்னர் விதவை மறுமணம் சமுதாயத்தில் ஏற்றுக் கொள்ளப்பட்டது. திருமண வயதை உயர்த்திச் சட்டங்களும் நிறைவேற்றப்பட்டன.

உரிமைகள் பல பெற்று உயர்வடையும் நிலையில் இன்று மகளிர் உள்ளனர்.

இந்து விவாக சட்டம், கிறிஸ்துவர் விவாக சட்டம், மற்றும் குழந்தைத் திருமணத் தடுப்பு திருத்தச் சட்டம் திருமணம் செய்து கொள்ளும் வயதை ஆடவர்க்கு 21 ஆகவும் மகளிர்க்கு 18 ஆகவும் உயர்த்தி உள்ளன. இச்சட்டங்களை மீறுவோருக்கு அபராதமும், சிறைத் தண்டனையும் விதிக்கப்படும். இளையோர் திருமணத்திற்கு இன்று சமுதாயத்தில் இடமே இல்லை.

இன்றைய சமுதாயத்தில் மகளிர்க்கு உயர்ந்த கல்வியும் வேலை வாய்ப்பு வசதிகளும் அளிக்கப்படுகின்றன. இருபதாம் நூற்றாண்டு முடிவதற்கு முன்னால் நம் நாட்டு மக்களின் எண்ணிக்கை நூறுகோடியை எட்டும் எனக் கருதப்படுகிறது. எனவே மக்கள் பெருக்கத்தைக் கட்டுப்படுத்துவது அவசரமும், அவசியமும் ஆகும். தமிழ்நாட்டில் கடந்த பத்து ஆண்டுக் காலத்தில் மக்கள் தொகைப் பெருக்கம் 17.23 சதவீதமே உயர்ந்துள்ளது. இந்நிலையில் குடும்ப நலத்திட்டம் மக்களியக்கமாகவே தமிழ்நாட்டில் செயற்பட்டு வருகிறது.

மக்கள் பெருக்கத்தைக் கட்டுப்படுத்துவதற்கு உதவி புரியும் மற்றொரு திட்டம் சிறுவயது திருமணத்தைத் தடுப்பது ஆகும். மக்கள் பெருக்கத்தின் நெருக்கடி நம்மை வாட்டும் நிலையில் இளம் வயதுத் திருமணம் என்னும் கொடுமைக்கு இடமே இல்லை. இத்தகைய காரணங்களால்தான் குடும்ப நலத்திட்டம் நமது தேசியத் திட்டங்களில் ஒன்றாகத் திகழ்ந்து வருகிறது. இன்று அனைவரும் அறிந்து கொள்ள வேண்டிய நெறி இதுவே.

## இளம் வயது திருமணம் சட்டத்திற்கு எதிரானது.
## ஆடவர்க்கு குறைந்த வயது 21. மகளிர்க்கு 18.

மக்கள் நல்வாழ்வு குடும்ப நலத்துறை, தமிழ்நாடு அரசு

mas (S) DIPR/2709/83-1

# ராஜா பார்லி

**நாலு வயதில் ரொட்டி மாவு பிசைந்த சங்குப்பிள்ளை இன்று நாற்பது பேர்களை ரொட்டி மாவு பிசைய வைக்கிறார் !**





நெற்றி நிறைய விபூதி குங்குமம், கம்பீரமான தோற்றம், கண்ணாடி, வெள்ளை வேஷ்டி சட்டை, காதில் கடுக்கன்—இவர்தான் சங்குப்பிள்ளை.

''நீங்க எப்படி வாழ்க்கையிலே முன்னேறினீங்க? சொன்னால் கட்டுரையா எழுதலாம்னு இருக்கோம்.''

சங்கோஜப்படுகிறார் சங்குப் பிள்ளை. மதுரை—திண்டுக்கல் சாலையில் உள்ள அவரது ரொட்டிக் கடையில் சந்தித்தோம்.

ஒரு பக்கம் பேக்கரி வியாபாரத்தைக் கவனித்துக் கொண்டே மறு பக்கம் பேசுகிறார்.

''நாலு வயசிலேயே எங்க ' அப்பா என்னை அருப்புக்கோட்டையிலே சின்னசாமி நாடார் வச்சிருந்த பேக்கரியிலே வேலைக்குச் சேர்த்து விட்டார். சம்பளம் எவ்வளவுன்னு கேட்கிறீங்களா? மாசம் எட்டணா.'' வாய் விட்டுச் சிரிக்கிறார்.

''பிஸ்கட்டை அடுக்கிறது. ஷெல்பைத் துடைக்கிறது இதுதான் என் வேலை. எடுபிடி மாதிரி இருந்தேங்க. முதலாளி ரொம்பக் கண்டிப்பானவர். சரியா வேலை செய்யாவிட்டால் சரமாரியாக அடி உதை விழும். ஐந்து வருடம் அவர் கடையிலேயே இருந்தேன். கடைசியா மாசம் இரண்டு ரூபாய் முழுசா சம்பளம் வாங்கினேன்.

''என் ஒன்றுவிட்ட அண்ணனோடு முதலிலும் பிறகு கே. பி. எஸ். கேன்னு ஒரு நண்பரோடும் சேர்ந்து வியாபாரத்தில் ஈடுபட்டு அனுபவம் பெற்றேன். அப்புறம் சின்ன அளவிலே சொந்தத்தில் தொடங்கினேன்.

''ராஜபாளையத்திலிருந்து பிஸ்கட் தயாரிக்கத் தினமும் கடை கடையா ஏறி திருநெல்வேலிக்குப் போய் சரக்குப் போட்டேன். திடீர்னு யுத்தம் வந்தது. பிஸ்கட் ரொட்டிக்கு ஏக டிமாண்ட். வாழ்க்கையில எனக்கு நல்ல காத்து வீச ஆரம்பிச்சது. மதுரைக்கு வந்து சொந்தமாகப் பேக்கரி வைச்சேன் மீனாட்சியம்மன் எனக்கு எந்தக் குறையும். வைக்கவில்லை.''

சங்குப்பிள்ளைக்கு இப்போது வயது 73. ''1955 வரை கையால்தான் ரொட்டி சுட்டோம். அப்புறம்தான் மெஷின் வந்திச்சு.''

'' 'ராஜா பார்லி' என்ற பெயர் எப்படி வந்தது?''

''பார்லி பிஸ்கட் பண்ண ஆரம்பிச்சதும் கடைப் பெயர் ராஜாவுடன் சேர்த்து ராஜா பார்லி ஆக்கினேன். என்னையே எல்லோரும் ராஜா பார்லின்னுதான் கூப்பிடறாங்க.

''முட்டையின் வெள்ளைக் கரு. முந்திரிப் பருப்பு, சர்க்கரை சேர்த்து 'மக்ரோஸ்' என்கிற பிஸ்கட் பண்ணுகிறோம். தவிர லெமன், பார்லி பிஸ்கட்டுகள் கேக்குகள் எங்க கடையிலே விசேஷம்.''

சங்குப் பிள்ளை சமீபத்தில் அமெரிக்காவில் நாலு மாதம் சுற்றுப் பயணம் செய்தார். டல்லாஸ், லாஸ்வேகாஸ், டென்வர், லாஸ் ஏஞ்சல்ஸ் போன்ற பதினைந்து நகரங்களில் உள்ள பெரிய பேக்கரி நிபுணர்களைச் சந்தித்துப் பேசியதுடன் நியூயார்க் நகரில் நடந்த கேக் அலங்காரப் போட்டியிலும் கலந்து கொண்டார்.

''என் மகளும் மருமகனும் அமெரிக்காவிலே இருக்காங்க. ஹூஸ்டன்லே மீனாட்சியம்மன் கோவில் கமிட்டியிலே மாப்பிள்ளை (எஞ்சினியர் திரு பாலகிருஷ்ணன்) மெம்பராக இருக்கிறார். அந்தக் கோவிலைப் பார்க்கப் போனேன். அப்படியே ஒரு நண்பர் உதவியால் அமெரிக்கா பூரா சுத்திப் பார்த்தேன்.

''இதோ பார்த்தீங்களா? (போட்டோ காட்டுகிறார்) இந்த கேக் நான் ஹூஸ்டனில் உள்ள த்ரீ பிரதர்ஸ் பேக்கரியிலே செய்தது. இதுக்குத் தனி சர்ட்டிபிகேட்கூடக் கொடுத்தாங்க.''

தீவிர கடவுள் பக்தர். மூன்று முறை வட நாட்டு யாத்திரை சென்று வந்தவர்.

''சாமி, நான் படிக்காதவன்தான். இருந்தாலும் அமெரிக்காவரை போய் வந்துட்டேன். அவங்க மெஷினைத்தான் ரொம்ப நம்பறாங்க. ஆனால் நம்ப உழைப்பு கிட்டே அவங்க பிச்சை வாங்கணும். நம்மிடம் இருக்கும் அபூர்வமான திறமைகளைப் பார்த்து அவங்க அசந்து போறாங்க.'' என்கிறார் சிரித்துக் கொண்டே.

**- பேட்டி: மன்னை சௌரிராஜன்**

**விளக்கொளியில் மதிமுகம்**
மேலட்டை வண்ணப்படம்:
நிலீப் பானர்ஜி



அவன் மேற்கொண்டு எதுவுமே பேசாமல், அவனையே உன்னிப்பாய்ப் பார்த்துக் கொண்டிருந்த விசாலத்தின் பக்கம் திரும்பாமல், டிபனைச் சாப்பிட்டு முடித்துக் கை கழுவச் சென்றான். காரணம் புரியாமல் மகாக் குழந்தைத் தனமாகக் கண்ணீர் திரை யிட்டது. அவனுள் ஓர் அவமான உணர்வையும் ஆத்திரத்தையும் கிளப்பிற்று. குளியலறைத் தனிமையில், தலையில் தண்ணீரை மொண்டு மொண்டு விட்டுக் கொள்கையில் வெட்கமில்லாமல் கண்ணீர் வெளிப்பட்டது.

''பரீட்சை யெல்லாம் முடிஞ்சாச்சோ இல்லையோ?''

கொஞ்சமும் கரிசனமும் அக்கறையும் இல்லாத கேள்வியாகப் பட்டது. அவன் எப்படி எழுதியிருக்கிறான் என்கிற கேள்வி யில்லை. அதைப் பற்றித் தெரிந்துகொள்ள வேண்டும் என்கிற சிரத்தையே இல்லை!

கோவில் காம்பவுண்டுக்குள் பூக்கடை வைத்திருக்கும் ஆறுமுகம் கூட அவனைப் பார்க்கும்போது நினைவாகக் கேட்கும்கேள்வி—

''பரீட்சை யெல்லாம் நல்லாப் போவுதா ஸார்?''

இந்த அவனது படிப்பையும் பரீட்சையையும் தனக்குப் போட்டியாக நிற்கும் அஸ்திரம் என்று அப்பா நினைப்பதாகப் பட்டது.

''நீ குருக்கள் பையன்ங்கறதை மறந்துடக்கூடாது!''

கண்ணாடிக்கெதிரில் தலையைத் துவட்டியபடியே அவன் தனக்குள் சொல்லிக் கொண்டான்.

''மறக்கறதாவது! அதான் முகத்திலேயே எழுதி ஒட்டியிருக்கே!''

'சுவாமி படத்திலே இருக்கிற 'ஹேலோ' மாதிரி உன்கிட்ட என்னவோ இருக்கு!'

'அது' என்னவாக இருக்கும் என்கிற ஆத்மார்த்தக் கவலையோடு அவன் தன் முகத்தை ஆராய்ந்தான்.

விஜய் கூட 'சாத்வீகம் தெரிகிறது முகத்தில்' என்று சொன்னது நினைவுக்கு வந்தது.

''வெல்!'' என்று அவன் தோளைக் குலுக்கிக் கொண்டான். 'என் முகத்துக்கு நான் பொறுப்பில்லை!''

''அதுதான் உன் பிளஸ் பாயிண்ட்!'' பாராட்டுகிற மாதிரிதான் சொன்னாள். 'நீ எதுக்கு (உன் முகத்தை) மாத்திக்கணும்?'. குளியலறையிலிருந்து வெளியில் வரும்போது அதரங்களில் ஒரு புன்னகைகூட அமர்ந்திருந்தது.

கூடத்துக் கொடியில் உலர்த்தி யிருந்த உத்தரீயத்தை மேலே முழுவதும் போர்த்தியபடி அவன் காலில் செருப்பில்லாமல் கிளம்பும்போது விசாலம் அவனைப் பார்த்து மென்மையாகச் சொன்னாள்:

வாஸந்தி



# ஒரு சங்கமத்தைத்

''அண்ணாவுடைய பேச்சு விடுவிடுக்கிற மாதிரி இருக்கும். யோசிச்சுப் பார்த்தியாணு......''

அவன் சரேலென்று திரும்பி அவளைப் பார்த்து.

''என் யோசனைத் திறன்லே உங்களுக்கு ஏன் சந்தேகம் அத்தை?'' என்று கேட்டு விட்டு விடுவிடுவென்று கோவிலை நோக்கி நடந்தான்.

அவன் உத்தர சுவாமி மலையின் படிகளை ஏறி மூலவர் சன்னதியை அடைந்தபோது நாலைந்து பேர்கள் நின்றிருந்தார்கள். கர்ப்பக் கிருகத்து வாயிலில் போடப்பட்டிருந்த திரையை விலக்கிக் கொண்டு அவன் உள்ளே நுழைந்தான். அப்பா பெரிய ஆயத்தங்களில் இருந்தார். அவனைப் பார்த்து இலேசாகப் புன்னகைத்தார். மெல்லிய குரலில் சொன்னார்.

''வா. தனியா எனக்குச் சமாளிக்கிறது இன்னிக்குக் கஷ்டம்'' என்றார். ''இரண்டு பேர் அபிஷேகத்துக்குக் கொடுத்திருக்கா!'' அப்பாவின் குரலிலும், பார்வையிலும் ஒரு மென்மை தெரிந்தது. அவன் லேசான ஆச்சரியத்துடன் பார்த்தான். கண்களில் புதிய ஒளி ஏறியிருந்த மாதிரி தோன்றிற்று.

அவன் அவர் சொன்னபடி தேனையும் பாலையும் சந்தனத்தையும் பூவையும் ஒரு பக்கம் ஒழுங்குபடுத்தினான். ரொம்பப் பிரகாசமில்லாத அந்த இடமும் அதில் தவழ்ந்த வாசனைகளும் நடுவில் நின்ற முருகனின் சிலையும் அவனுள் ஒரு நூதன உணர்வை ஏற்படுத்தின. அப்பா அவருடைய வேலையில் ஐக்கியமாகிப் போயிருந்தார். வெறும் தரிசனத்துக்கு வந்து சன்னதியில் காத்திருந்தவர்களுக்காகத் தீபாராதனைசெய்தார்.

முருகனின் முகத்துக்கு நேராகச் சூடம்



காட்டும்போது அப்பாவின் கண்களில் தெரிந்த பிரகாசம் அவனுள் லேசான வியப்பை ஏற்படுத்திற்று. கூடத் தாம் பாளத்தை ஏந்தியபடி சென்றவரின் பின் னால் அவன் குங்குமத்தையும் விபூதியையும் எடுத்துக் கொண்டு தொடர்ந்தான். அப்பா யாருடனும் பேசாமல் தன்னுள் இருந்த வாகிரியில் மிதக்கிறவர் போல் தட்டை நீட்டிவிட்டு மறுபடியும் கர்ப்பக் கிருகத் துக்குள் நுழைந்தார். அவன் குனிந்த தலை நிமிராமல் நீட்டிய கரங்களின் உள்ளங் கைகளில் இரண்டிரண்டு சிட்டிகை வைத்துத் திரும்புகையில் கர்ப்பக் கிருகத்தின் வாயிலில் ஒதுவார் சிவானந்தம் நின்றிருந்தார். அவனைப்பார்த்து லேசாக நகைத்து மெல்லிய குரலில்,

''பரீட்சை யெல்லாம் நல்லாப் பண்ணி யிருக்கியா தம்பி?'' என்றார்.

''பண்ணியிருக்கேன்'' என்று தலையாட்டி விட்டு அவன் உள்ளே நுழைந்தான்.

மறுபடியும் திரையைப் போட்டு அப்பா அபிஷேகத்துக்கான ஆயத்தங்களில் இறங் கினார். ஏற்கனவே இருந்த அலங்காரத்தை அவர் மென்மையாக அகற்ற ஆரம்பித்த போது வெளியிலிருந்து ஓதுவார் பாடுவது கேட்டது.

'நினைந்து நினைந்துணர்ந்துணர்ந்து
நெகிழ்ந்து நெகிழ்ந்தன்பே
நிறைந்து நிறைந்துற் றெழுங்
கண்ணீரத னாலுடம்பு
நனைந்து நனைந்தருளமுதே
நன்னிதியே ஞான
நடத்தரசே யென்னுரிமை
நாயகனே யென்று...'

அப்பா கண்ணீர் மல்கிய கண்களினூடே பாட்டை ரசிக்கும் பாவனையில் தலையைப் பலமாக அசைத்து அவனைத் தோழமையுடன் பார்த்துச் சிரித்தபோது, அவனுள் ஒரு சின்னச் சிலிர்ப்போடியது. அவனுக்குத் தெரிந்த அப்பாவுக்கும் இப்பொழுது கர்ப்பக் கிரகத்தில் நிற்கும் அப்பாவுக்கும் நிறைய வித்தியாசம் இருப்பதாகப் பட்டது.

நடிகை: என்னங்க இது! இவ்வளவு பெரிய அண்டாவைத் தூக்கிக்கிட்டு ஒரு சீன்ல வர்றதுதான் என் ரோலா?''
டைரக்டர்: நான்தான் அப்பவே சொன் னேனே படத்தில் உங்களுக்கு ஒரு கன மான பாத்திரம் இருக்குன்னு.
—இளை அ. கதிர்வேல்





'புனைந்துரையேன் பொய்புகலேன்
சத்தியஞ் சொல்கிறேன்
பொற் சபையிற் சிற்சபையிற்
புகுந்தருண மிதுவே....''

வார்த்தைகளுக்கோ, பாடிய விதத்துக்கோ ஒரு சக்தி இருந்தது. அப்பாவின் முகத்தில் விகசித்த பரவசம் அவன் மேலும் லேசாகப் பன்னீர் தெளித்தாற்போல் படர்ந்தது.

''திரையை விலக்கு'' என்று அப்பா சொன் னதும் அவன் சட்டென்று சுய நினைவு வந்த வனாய் விலக்கினான். சன்னிதியில் இப் பொழுது கூட்டம் தெரிந்தது. அபிஷேக அர்ச்சனைக்குக் கொடுத்திருந்த பக்தர்கள் வந்திருப்பார்கள் என்று புரிந்தது.

அவன் குடம் குடமாக எடுத்துக் கொடுக்க அப்பா முருகனுக்கு நீராட்டினார். பாலாபி ஷேகத்தின்போது கூட்டத்திலிருந்து பெரிய ஆரவாரம் எழுந்தது. கூட்டத்தையும் முரு கனையும் கவனிப்பதை விட அவனுக்கு அப்பா வைக் கவனிப்பது அதிக சுவாரஸ்யமாக இருந்தது. அவர் தம் ஆத்ம திருப்திக்காகவே இதையெல்லாம் செய்வதாகத் தோன்றிற்று. விரல்களின் மென்மையான வருடலிலும் அத ரங்களில் இருந்த புன்னகையிலும் ஒரு பரிவும் பிரியமும் தெரிந்தது. சொந்தக் குழந்தை யைச் சீராட்டுகிற மாதிரி 'அவருள் ஜனிக்கும் பிரியம் எல்லாவற்றையும் அவர் இந்தச் சன்னிதானத்திலேயே சமர்ப்பித்து விடுகிறார் என்று தோன்றிற்று. அதனால்தான் பெற்ற குழந்தையிடம், அவருடைய பாதையி லிருந்து விலகி ஓடும் பையனிடம் — ஒட்டுதல் காண்பிக்க முடியாமல் போயிருக்க வேண்டும்....

பாத்திரத்தில் இருந்த சந்தனக் குழம்பை அவன் சிலையின் மீது ஊற்றும்போது அவரும் கூடப்பிடித்துக் கொண்டார். கவசம் போட் டாற்போல் சந்தனம் நின்றதும் இமைகள் மேல் லாகவமாக நீவிக் கண்மலரைத் திறந் தார். பக்தர் கூட்டம் மெய்மறந்துபோனது ஸ்பஷ்டமாகத்தெரிந்தது. அவனுக்கே 'நான்' என்பதே கரைந்து போனது போல் பிரத்தி யேகப் பிரச்னைகளும் அபிலாஷைகளும் மறந்து போயின. அந்தக் கர்ப்பகிருகத்துக்கு வெளியில் இருக்கும் உலகமும் அதன் மயக் கங்களும் வெகு தூரத்துக்கு விலகிப் போய் விட்டாற்போல் பிரமை ஏற்பட்டது. டில் லிக்கும் சுவாமி மலைக்கும் இருக்கும் வித்தி யாசம் அப்பாவின் கண்ணுக்குத் தெரியாமல் இருப்பதற்கு இதுதான் காரணமாக இருக்க வேண்டும். வெளியில் இருக்கும் உலகம் அப்பாவுக்குத் தேவையில்லாதது.

''சரணாகதவத்ஸலாய நம: ஓம்....''

அப்பா ராகத்தோடு அஷ்டோத்திரத்தை ஆரம்பித்தார். அவர் வீட்டில் விஸ்தார மாகப் பூஜை செய்யும்போதெல்லாம் ஏற் படும்நமைச்சல் இன்று ஏற்படாதது வியப்பை அளித்தது.

தீபாராதனையைச் சந்தன கவச முகத்தின் முன் நீட்டியபோது முருகன் உண்மையி லேயே இத்தனை கவனிப்புக்குத் திருப்தி அடைந்திருப்பார் என்று அவன் நினைத்துக் கொண்டான். இல்லாவிட்டால் அந்தப் புன்னகைக்கு என்ன அர்த்தம்?

# இந்தியாவின் புகழ் பெற்ற நிதி உதவி அளிக்கும் சுகேசன்ஸ்

உங்களுக்கு பணியாற்ற பயன்படுத்திக் கொள்ளுங்கள்
ஏற்றுமதி இறக்குமதி வியாபாரத்திற்கு கடன் உதவி அளிப்பதில்
நீண்டகாலம் அனுபவமும், திறமையும் பெற்ற சுகேசன்ஸ் உங்கள்
ரொக்கத்திற்கு அதிகபட்ச பலன் அளிக்கும் சிறந்த திறமை பெற்றவர்கள்.
நிதி உதவி தேவைப்படும் ஏற்றுமதி இறக்குமதியாளர்களுக்கும் நாங்கள்
கடன் உதவி வழங்குகிறோம்.

நாங்கள் டிபாசிட்டுகளை ஏற்றுக் கொண்டு பின்கண்ட விகிதத்தில் வட்டி அளிக்கிறோம்.

15% — 18%* மாதந்தோறும், காலாண்டுதோறும், அரையாண்டுதோறும்
மற்றும் ஆண்டுதோறும் வட்டி தரப்படும்

23. 19% (ஏறத்தாழ) வட்டியும், டிபாசிட்டும் 3 ஆண்டு காலத்திற்கு பிறகு
திரும்பப் பெற்றுக் கொள்ளலாம்

66.67% (ஏறத்தாழ) வட்டி, 3 வருட ரொக்க சர்டிபிகேட்டுகளுக்கு வழங்கப்படும்

---

குறைந்தபட்ச டிபாசிட்டாக ரூ 1,000/ம், ரூ 500/ன் மடங்குகளும் ஏற்றுக்கொள்ளப்படும்.



SUGESAN FINANCE INVESTMENT
(COPYRIGHT REGISTERED)



38, Rajaji Road, Madras-600 001.
Phones: 36870, 26690*
Telex: 041/480. Grams: SUGESANS

BRANCHES: AHMEDABAD, BANGALORE, BOMBAY, CALCUTTA,
COCHIN, COIMBATORE, HYDERABAD & RAJKOT.

ADSERVICE-S-1400

# பழனியில் சிகிச்சை



**பெறுங்கள் இதுவரை நீங்கள் கஷ்டத்துடன் அனுபவித்த வியாதிகள் நீங்கி சுக வாழ்வு பெறலாம், வருக!**

பிரபல உலகப் புகழ் வைத்திய மன்னன்

## Dr. S. காளிமுத்து,

R.M.P., (IND), V.V.C., A.M.I.H., R.A.M., P.R.H.M.P.,

அவர்களை பழனியில் 23-ந் தேதி முதல் 31ந்தேதி வரை அவர் தலைமை அலுவலகமான பழனி டவுன் பழைய தாராபுரம் ரோட்டில் உள்ள பழனி சித்தர் வைத்தியசாலை (Regd)யில் காலை 10 மணி முதல் பகல் 12 மணி வரை, மாலை 4 மணி முதல் 6 மணி வரையிலும் நேரில் வந்திருந்து ஆலோசனையுடன் எல்லா வியாதிகளுக்கும் சிகிச்சையும் மருந்துகளும் பெறலாம்.

நீங்கள் கவலைப்படும் பிரச்சினையான தாம்பத்திய வாழ்வில் குறைபாடு, சோர்வு, வீரிய குறைவு, குடும்ப உறவில் முன்மாதிரி செயல்படுத்த முடியாமை, நரம்பு துவளல், தேக உறுப்புக்கள் மெலிவு, குழந்தை செல்வம் இல்லாமை, அணுக்கள் குறைவு, வெட்கம், நடுக்கம், இருமல், கபம், தும்மல், வாதநோய், வாய்வு, வயிற்றுவலி, உள்-வெளி ரத்த நவமூல வியாதிகள், குடல் புண், வாந்தி மற்றும் இதில் கூறப்படா நோய்களுக்கும் 86 வருட அனுபவ மருந்துகளும் ஆலோசனையும் நேரில் டாக்டரிடம் பெற்று சுகமடைய அழைக்கிறோம். வணக்கம்.

**பழனி சித்தர் வைத்தியசாலை (Regd.) பழனி-624601**

போன்: 316, 316ஏ. ★ வீடு: 420 ★ தந்தி: சித்தர்

தீபாராதனைத் தட்டை அப்பா முன்னே எடுத்துச் செல்ல, அவன் குங்குமத்தையும் விபூதியையும் வழங்கியபடி பின்னால் செல்கையில் பெண்கள் பகுதியிலிருந்து மிக மெல்லியதாக "ஹாய்!" என்ற குரல் கேட்டு அவன் தூக்கி வாரிப் போட்டு நிமிர்ந்தான்.

தாரா!

கோவிலுக்கு என்று பிரத்தியேகமாக ஆடையை மாற்றாமல் அதே ஜீன்ஸ், டீஷர்ட்டுமாய் — கண்களில் ஆச்சரியமும் குறும்புமாய்! எதிர்பாராமல் அவள் தன்னை வேஷ்டியிலும் வெறும் மார்பை மூடிய சின்ன உத்தரீயத்திலும் பார்க்க நேரிட்டது அவனுள் இத்தனை நேரம் புதையுண்டு போயிருந்த கூச்ச உணர்வுகளை யெல்லாம் பீரிட்டுக்கொண்டு ஊளப்பிற்று.

பதிலுக்கு முறுவலிக்கக் கூடத் தோன்றாமல் அவன் நின்றான்.

"விபூதி குங்குமம் வாங்கிக்கோயேண்டி தாரா!"

பளிச்சென்று சரிகை தெரிந்த ஒன்பது கெஜப் புடவையில் அவள் பக்கத்தில் நின்றிருந்த ஓர் அம்மாள் அதட்டவும் அவள் சிரித்தாள்.

"நீங்க வாங்கிண்டாச்சோ இல்லையோ பாட்டி? அது போறும்!"

மார்புக்குக் குறுக்காகப் பிடிவாதமாகக் கட்டியிருந்த அந்தத் தந்தக் கைகளை அவன் ஒரு விநாடி தயக்கத்துடன் பார்த்து லேசான புன்னகையுடன் தலையைக் குனிந்தபடி நகர்ந்தான். மார்புபைத்தியக்காரத்தனமாக அடித்துக்கொண்டது. கன்னங்களில் சூடேறியிருந்தது.

"இன்னிக்கு நீ கோவிலுக்கு வந்ததே பெரிசு!" என்று அந்தப் பாட்டி முணுமுணுப்பது கேட்டது. அவள் கோவிலுக்கு வருவாள் என்று நிச்சயம் அவன் நினைக்கவில்லை. அதுவும் இன்று வந்திருக்கிறாள்! அவன் இந்த மாதிரி ஒரு கோலத்தில் விபூதி சம்புடத்தை ஏந்திக் கொண்டு நிற்கும் நாளில்! முகத்தையே பார்க்காமல் நீட்டிய கரங்களில் அள்ளி வைத்து அவன் சன்னதியின் இருட்டோரத்தில் தன்னை மறைத்துக் கொண்டான்.

ஓதுவாரின் குரல் தெளிவாகக் கேட்டது.

"நம்ம குருக்களுடைய இரண்டாவது பிள்ளை. இன்ஜினியரிங் ஃபைனல் பரீட்சை எழுதியிருக்கான். ரொம்பக்கெட்டிக்காரன்."

"அப்படியா?" என்றது பாட்டியின் குரல். "முகத்திலே தெரியறதே? நல்ல தேஜஸ்!"

சுரீரென்று மனசு சுருங்கியது. இனம் புரியாத கூச்சத்தில். இந்த ஓதுவாருக்கும் வேறு வேலையில்லை என்று ஆத்திரம் வந்தது. குருக்களுடைய பிள்ளை இன்ஜினியராவது அப்படி என்ன உலக மகா அதிசயம்?

தாராவும் அவள் பாட்டியும் கிளம்பிவிட்டதை நிச்சயம் செய்து கொண்ட பிறகு வெளியில் வந்தான். அவளைப் பார்ப்பதற்குச் சற்று முன்வரை கர்ப்பக்கிருகத்தில் எப்படிப் பட்ட ஒரு மோன மயக்கத்தில் இருந்தோம்; அதிலிருந்து பிய்த்து இழுக்கப்பட்டு எப்படி



கண்ணன்: ஸ்டெனோ புவனாவைக் காதலிச்சது தப்பு.
முரளி: ஏன்? என்ன ஆச்சு?
கண்ணன்: காதல் கடிதங்களைக்கூட அல்லவா ஷார்ட் ஹாண்டில் எழுதி அனுப்பிச்சுடறா. படிச்சுப் புரிஞ்சுக்க முடியாமல் அவஸ்தைப் படறேன்.
—வனிதா செல்லப்பா

எதிர்பாராத ஒரு நிர்வாண நிஜத்திற்கு முன் நிறுத்தப்பட்டோம்!

தன்னை அந்த நிலையில் பார்த்தபோது தாராவுக்கு எப்படிப்பட்ட ஆச்சரியம் ஏற்பட்டிருக்கும் என்று அவன் யோசித்துப் பார்த்தான். அதிர்ந்து போயிருப்பாளோ? அதிர்ச்சி ஏதும் தெரியவில்லை அவள் முகத்தில். வழக்கமான குறும்புதான் தெரிந்தது.

சட்டென்று தனது கவலையையும் அசம்பாவிதமான எண்ண ஓட்டத்தையும் கண்டு அவனுக்கு வெட்கம் ஏற்பட்டது. அவள் யாராயிருந்தாலும், அவள் எந்தக் கோலத்தில் இருந்தாலும் அவனை எப்படி அது பாதிக்கப் போகிறது? ஏன் பாதிக்க வேண்டும்? எத்தனையோ முக்கியமான பிரச்னைகள் அவளது அழகான தலையை ஆக்ரமித்திருக்கும்போது ஒரு குருக்களின் பிள்ளையைப் பற்றி அவள் ஏன் சிந்திக்க வேண்டும்? உபயோகமற்ற ஆடம்பர சிந்தனை அது அவளைப்பொறுத்தவரை....

ஒரு நாள் அவன் எங்கோ போய்விட்டு வீடு திரும்பிக் கொண்டிருந்தான். அவனை இடித்துக் கொண்டு நிற்கிறாற் போல் கருப்பு ஃபியட் நின்றது.

"ஹாய் கார்த்திக்!"

அவளுடைய முகத்தைப் பார்த்ததுமே நெஞ்சில் புது வெள்ளம் பாய்ந்தது.

"ஹாய்! ஹௌ ஆர் யூ?"

"நீ ஏன் கோவிலுக்கே இப்பல்லாம் வரதில்லே?"

அவன் வியப்புடன் அவளைப் பார்த்தான்.

"ஏது, கொள்கையெல்லாம் மாறிடுத்தா? பரீட்சைக்குச் சரியாகப் படிக்காமல் சாமியைக் காக்காய் பிடிக்கலாம்னு பார்க்கறியா?"

"இது எதுக்காகவும் நான் கோவிலுக்கு வரல்லே" என்று மோகனமாகச் சிரித்தாள். "ஹௌ நேஸ்டி யூ ஆர்! உன்னைப் பார்க்கணும்னு நான் வந்திருக்கக் கூடாதா?"

(தொடரும்)

# உயிருள்ளவரை உஷா



காதலைப் பழுக்க வைக்கப் படாத பாடு பட்டிருக்கிறார் டி. ராஜேந்தர். காதலர்களை ஒன்று சேர்க்கும் முரட்டுப் பணியை அவரே ஏற்றுக்கொண்டு சைக்கிள் செயின் உதவியோடு ஜாம் ஜாம் என்று முடித்து வைத்து விட்டு உயிரை விடுகிறார்.

கல்லூரியில் மலர்கிறது காதல். கதாநாயகி நளினி தன்னைப் பின்தொடரும் நாயகன் கங்காவை இடைவேளை வரை 'ஆ...ஆ...' வெனத் துப்புகிறாள்.

இடைவேளைக்குப் பிறகு — அந்தப் பிக்னிக் அந்தப் பச்சை குத்தல் விஷயம் — அந்த ஜுரம் அவளது கல் நெஞ்சை நெகிழ வைக்கிறது. நெகிழ்ச்சிக்குப் பிறகு அண்ணனின் குறுக்கீடு, ஆவேசம் எல்லாமாகச் சேர்ந்து கதையின் விறுவிறுப்பைக் கூட்டி விடுகிறது.

கதாநாயகன் கங்காவின் தோற்றம் காதலுக்கு ஏற்றதாக அமையாதது ஒரு பெரிய குறை. காதலி நளினி மட்டுமென்ன, பொருத்தமான ஜோடிதான். நடிப்பிலும் இருவரையும் சிலாக்கியப்படுத்த முடியவில்லை.

டி. ராஜேந்தர் இப்படத்தின் மூலம் எட்டாவது படியில் கால் வைத்துள்ளார். கதை, திரைக்கதை, வசனம், பாடல், இசை, டைரக்ஷன், நடிப்பு — எட்டாவது சண்டைக் காட்சிகளில் வீரம்.

கதையில் விட்ட கோட்டையை இசையில் பிடித்திருக்கிறார். ஏழு பாடல்களையும் இனிமையான இசையில் அழகாகப் படமாக்கியிருக்கிறார்.

ராதாரவி நடிப்பில் ஆக்ரோஷம் மிகுதி. தங்கையின் காதலுக்குக் குறுக்கே



# ஒரு கை பார்ப்போம்

மூன்று கில்லாடிகளின் கதை.

ஒருவன் பிள்ளையாரையே கடத்திக் கொண்டு போய்ச் சம்பாதித்தவன் — ராதா கார்த்திக்கைக் காதலித்தாலும், யுள்ளார். அப்படிப்பட்ட நகைச்சுவைக்கு அவருடைய உருவம் ஒத்துழைக்காததைப் பல இடங்களில் பார்க்கிறோம்.

என்றாலும் சில இடங்களில் நம்மை வயிறு குலுங்கச் சிரிக்கவைக்கிறார், ஜோடி கார்த்திக்!

நகைச்சுவையில் இவர்களை விடப் பெரிய 'கில்லாடி' மனோரமா. வேலைக்கு வந்த கார்த்திக்கிடம் இவர் கத்தரிக்கோலும் கையுமாகக் கேள்விகள் கேட்டபடியே மெழுகுவர்த்திகளை வெட்டும்போது நம்மை மறந்து சிரிக்கிறோம்.

கார்த்திக்.

மற்றொருவன் கட்டினமனைவியின் தாலியை உருவிக் கொண்டு ஓடியவன் — விசு.

மூன்றாவது இல்லாடி போலி. முன் இருவரின் முகமூடியைக் கிழிக்க வந்தவன் — வினு சக்கரவர்த்தி.

பைத்தியக்காரி மனோரமா வீட்டில் மூவரும் 'டிகாணு' போட்டுக் கொண்டு அடிக்கும் 'லூட்டி'தான் கதை.

கிச்சுகிச்சு மூட்டும் அடுக்கடுக்கான சிரிப்பு நிகழ்ச்சிகளைக் கொண்டே கதையை 'சீரியஸ் டிரேக்'கிற்கு இழுத்துச் சென்றுள்ளார்கள்.

விசு வான நகைச்சுவையிலிருந்து Action நகைச்சுவைக்குத் தன் கவனத்தைத் திருப்பி படத்துக்கு வேண்டாத விருந்தாளியாகவே வந்து போகிறார்.

பணத்துக்காக மனைவியைக் கணவன் கொடுமைப்படுத்துவதைக் காட்டலாம். அதற்காகச் செந்தாமரை மாதிரி மனிதத் தன்மையிலிருந்து விலகியா கொடுமைப் படுத்துவது? மிகை!

வினு சக்கரவர்த்தியை நினைத்தால் கேம் வரும் கடுகும் தட்டில் போட்டுக் கலக்கி கார்த்திக் — விசு இருவரிடமும் கொடுத்த இடம் நினைவுக்கு வருகிறது.

அதே போல் நம்ப முடியாத கதையையும், நகைச்சுவையையும் டைரக்டர் எஸ்.பி. முத்துராமன் ஒரு கலக்குக் கலக்கியிருக்கிறார்.

நிற்பதில் நியாயமான காரணம் தெரியவில்லை.

சரிதா கதாபாத்திரம் வீணடிக்கப்பட்டிருக்கிறது. தங்கையின் காதலுக்கும் தம்பியின் ஆவேசத்திற்கும் இடையே அவரைப் பொங்கி எழச் செய்திருக்க வேண்டாமா?

கல்லூரி ஆசிரியர் மூர்த்தியைப் பாராட்ட முடியாமல் அவரது 'குதிரைக் கனைப்பு' குறுக்கே நிற்கிறது.

'ஒருதலை ராகம்' பாதிப்பு இன்னமும் டி. ராஜேந்தரை காதல் நினைவுகளிலிருந்து மீட்கவில்லை என்பதற்கு மேலும் ஓர் உதாரணம் 'உயிருள்ளவரை உஷா'.

# கண் சிவந்தால் மண் சிவக்கும்



தெருக்கூத்து ஆராய்ச்சிக்காகக் கிராமத்தை நோக்கிப் போன கதாநாயகனும் நாயகியும் அங்கே போன பிறகு அந்தக் கிராமத்துப் பிரச்னைகளில் தங்களை எவ்வாறு ஈடுபடுத்திக் கொள்கிறார்கள் என்பதேகதை.

பிரச்னை புதிதில்லை என்றாலும் அதைக் காமிராவில் சொல்லியுள்ள பாணியில் புரட்சியைப் புகுத்தியுள்ளார்கள்.

பண்ணையார் (கொடுமைக்காரர்) வேடத்திற்குக் கல்கத்தா விசுவநாதனைத் தேர்ந்தெடுத்து அவரை மென்மையாக 'வில்லத்தனம்' செய்ய வைத்திருப்பது டைரக்டரின் வித்தியாசமான பார்வையை வெளிப்படுத்துகிறது.

நடிப்பில் அழுத்தம் காட்டி நடித்திருப்பவர் பண்ணையாரின் ஆசைநாயகியாக வரும் சுபத்ரா. நமுட்டுச் சிரிப்புச் சிரித்து எதிரியைத் தன் பக்கம் சேர்க்கும் சாகசம்.

படத்தில் தாடிக்குப் பஞ்சமில்லை. கதாநாயகன் விஜய் மோகன். வெறும் உதட்டசைவு நாயகர்களுள் இவரும் ஒருவராகி விட்டாரா? துடிப்பு தேவை.

பூர்ணிமாவைத் திரைக்கு அழகுபடுத்தப் பயன்படுத்திக் கொண்ட மாதிரி தோன்றுகிறது.

அடையாளம் தெரியாத பக்கிரி வேடத்தில் ரவீந்தர் 'பூச்சாண்டி' காட்டியிருக்கிறார் — கடைசியில் கதாநாயகியைக் காப்பாற்ற உதவியிருக்கிறார் — பழசு. ரொம்பப் பழசு.

ஜெய்சங்கர் தான் இப்படிப்பட்ட படங்களிலும் பரிமளிக்க முடியும் என நிரூபித்துள்ளார். ராஜேஷும் அப்படியே!

கோபாலகிருஷ்ண பாரதியாரின் பாடல்கள் தனஞ்செயனின் நடனம், புரசை கண்ணப்ப தம்பிரான் குழுவினரின் தெருக் கூத்து, வடக்கே இருந்து வரவழைக்கப்பட்ட சோமேந்து ராயின் ஒளிப் பதிவு — அனந்து, ந. முத்துச்சாமி ஆகியோரின் நறுக்கான வசனங்கள், இளையராஜாவின் கதையமைப்பை ஒட்டிய இசை, வங்க டைரக்டரை மனத்தில் நினைத்துக் கொண்டு கண்களைச் சிவக்க வைக்க முயற்சி செய்துள்ளார் டைரக்டர் ஸ்ரீதர் ராஜன்.

கண்ணே சிவக்காதபோது மண் எப்படிச் சிவக்கும்?

— நிரைஞானி

# நீங்கள் கேட்டவை

தராசு

# திருச்செந்தூரில் சுப்பிரமணியருக்கு நியாயம் கிட்டியதா?

○ பெ. மோகன்ராஜ், பெங்களூர்

? கல்கியின் ஆசிரியர் மற்றும் அச்சிடுபவர் பற்றிய கடைசிப் பக்கக் குறிப்பை ஆங்கிலத்தில்தான் வெளியிட வேண்டுமா?

! அது வடக்கே உள்ள விளம்பரதாரர்கள் வசதிக்காக.

○ க. சந்தானம், சூர்பிபாளையம்

? கேள்வி கேட்பது; பதில் சொல்வது, சிறந்த கேள்வியைத் தேர்ந்தெடுப்பது இதில் எது கடினம்?

! சிறந்த பதிலைப் பெறக் கூடிய நல்ல கேள்வியைத் தேர்ந்தெடுப்பது.

○ ஏந்தல் ஆர். இளங்கோ, திருச்சி

? கவிஞர் வைரமுத்துவின் புதுக் கவிதைகளில் தங்கள் மனம் லயித்ததுண்டா?

! அவருடைய ''கவிராஜன் கதை'' அண்மையில் ஒரு விழாவில் வெளியிடப் பட்டது. சாவியில் தொடர்ந்துவந்தபோதே படித்து ரசித்ததை மறுபடி நூல் உருவில் படித்து மகிழ்ந்தேன். பாரதி நூற்றாண்டில் பாரதிக்கு அஞ்சலியாக வெளி வந்துள்ள நூல்களில் மிகச் சிறந்தது. அகாதமி பரிசு, அண்ணாமலை பரிசு, ஞானபீடப் பரிசு எல்லாம் பெறத் தகுதி உடையது. பாரதியின் வாழ்க்கையை நன்கு அறிந்தவர் கூட இந்தப் புத்தகத்தின் எந்தப்பக்கத்தை வேண்டுமானாலும்பிரித்துக்கவியழகில் லயிக்கலாம். பாராட்டுக்குரியவர் வைரமுத்து மட்டுமல்ல: இப்படிப் புதுக் கவிதையாக பாரதி வரலாற்றை எழுதச் செய்யலாம் என்று தீர்மானித்து அதை நிறைவேற்றியும் வைத்த சாவியும்கூட. பக்கத்துக்குப் பக்கம் கவி அழகின் ஆனந்த தாண்டவத்தை மறு அரங்கேற்றம் செய்திருப்பது பாரதி பதிப்பகம், சென்னை-17.

○ கே. காந்தி, போதனூர்

? திருச்செந்தூர் தேர்தலில் அ.இ.மு.க. வெற்றி பெற்று இ.மு.க. தோல்வி அடைந்தது குறித்து?

! முன்னது வெட்கப்பட வேண்டிய வெற்றி. பின்னது பெருமிதத்துக்குரிய தோல்வி.

○ கே. என். செல்வரத்தினம், வடகாடு

? பாயும் புலி பதுங்கிவிட்டதேன்?

! சகல கலாவல்லவனின் பாதிப்பு.

○ தென்னூர் செல்வன், திருச்சி ★

? திருச்செந்தூர் தேர்தல் முடிவில் சுப்பிரமணியருக்கு நியாயம் கிட்டியதா இல்லையா?

! பால் கமிஷன் அறிக்கை — சுப்பிரமணிய பிள்ளை மரணம் — இதையே தி. மு. க. பிரதான பிரச்னையாக்கி மக்கள் மன்றத்தின் தீர்ப்பைக் கோரியது. அ. தி. மு. க.வோ சத்துணவுத் திட்டம் தொடங்கி குமாய்க் கிணறு வரை மக்கள் வரிப் பணத்தில் நடந்த நற்செயல்களெல்லாம் கட்சிப் பணி போல் காட்டிக் கொண்டது. இருந்தும் அ. தி. மு. க. 1710 வாக்குகளே அதிகம் பெற்றது. சுப்பிரமணிய பிள்ளை மரணத்தில் அ.தி.மு.க. அரசு நியாயம் வழங்கவில்லை என்று தி. மு. க.வுக்கு வோட்டளித்த 30,940 மக்கள் கருதுகின்றனர். அதுமட்டுமல்ல. இதே பிரச்னையைத் தேர்தல் களத்தில் முன் வைத்த இ. காங்கிரஸ், காந்தி காமராஜ் தேசிய காங்கிரஸ், ஜனதா ஆகிய கட்சிகள் பெற்ற வாக்குகளையும் சேர்த்தால் அ. தி. மு. க. வுக்கு எதிராக 47,401 வாக்குகள் விழுந்துள்ளன. இது செல்லுபடியான வாக்குகளில் 58 சதம்! சுப்பிரமணியருக்குத் திருச்செந்தூரில் நியாயம் கிட்டியுள்ளது என்பதற்கு இதைவிட வேறு சான்று தேவையில்லை.

○ வி. சந்திரபோஸ், மொண்டியம்மன் நகர்

? திருச்செந்தூரில் அ. தி. மு. க. வெற்றி பெற்றதைப் பற்றி என்ன நினைக்கிறீர்கள்?

! தேர்தல் கமிஷனின் அறிவுரைகளைப் புறக்கணித்து பண பலத்தையும் அதிகார பலத்தையும் அரசு இயந்திரத்தையும் முழுமை

யாகப் பயன்படுத்திய அ. தி. மு. க. தேர்தல் நடப்பதற்கு முன்பே தார்மீக அடிப்படையில் படுதோல்வி அடைந்துவிட்டது. வாக்குகள் அடிப்படையில் பெற்ற வெற்றியை நீதி வென்றது என்று முதல்வர் வர்ணித்தது நகைப்புக்கிடமானது.

**○ எம். சிவஞான முருகன், ஸ்ரீவைகுண்டம்**
**? கருணாநிதியின் உடலுக்கு என்ன நேர்ந்தது? என் நண்பர்கள் புற்று நோய் என்கிறார்களே உண்மையா?**

! தமது உடல்நிலை பற்றி இல்லாததையும் பொல்லாததையும் எழுதுகிறவர்களுக்குச் சமீபத்தில் இல்லஸ்டிரேட்டட் வீக்லி ஆசிரியருக்குக் கடிதம் பகுதியில் சவுக்கடி கொடுத்திருக்கிறார் கருணாநிதி. ஜனநாயகத்துக்கு இன்றியமையாத எதிர்ப்புப் பணி ஆரோக்கியத்துடன் தொடரட்டும்.

**○ மயிலை கோபி, சென்னை-4**
**? பரிசு பெற்ற திருவையாறு நரசிம்மன் கேள்வி எங்கே சார் காணோம்?**

! அது சற்றே உருமாறி பரிசு பெற்ற எம். ராஜேந்திரன் கேள்விக்குப் பதிலாக அமைந்திருக்கிறது. அதனால்தான் இருவருக்குமே பரிசு கிடைத்தும் இருக்கிறது.

**○ ஏ. எம். பழனிச்சாமி, புது சித்தாபுதூர்**
**? தமிழ் நாட்டில் பலரும் ஹிந்தியை எதிர்க்கிறார்கள். ஆனால் ஹிந்திப் படங்கள் 200 நாட்கள் ஓடுகின்றனவே?**

! ஹிந்திக்காகவா படம் பார்க்கிறார்கள்? மசாலா படத்தை ரசிக்க மொழி அறிவே தேவையில்லையே.

**○ துரை உஷா, டால்மியாபுரம்**
**? அடுத்த மாதம் பதினெட்டாவது வயதை எட்டிப் பிடிக்கப்போகும் எனக்குத் தங்கள் அறிவுரை?**

! முதலில் என்றும் பதினெட்டாய் விளங்க வாழ்த்து. பிறகு அறிவுரை: சூழ்நிலைகளால் மிகச் சுலபமாகப் பாதிக்கப்படக்கூடிய வயது இது. உடல் பலத்தை விட மனோபலம் முக்கியமானது. பலவித நண்பர்கள் தோன்றுவார்கள். பல திசைகளில் இழுப்பார்கள். யாரையும் பகைக்க வேண்டியதில்லை. ஆனால் தவறான திசை எனில் வரமுடியாது என்று கூற மனோதிடம் வேண்டும். வளர்த்துக்கொள்ளுங்கள்.

**○ ஏ. ஹரிதாஸ், அச்சம் பாளையம்.**
**? நம்நாட்டில் எதிர்க்கட்சிகள் செயல்படும் விதம் பற்றி உங்கள் கருத்து?**

! தனித் தனியே கெட்டிக்காரர்கள்; இணைந்தால் மூடர்கள். — இதுவே நமது துரதிர்ஷ்டம்.

**○ வஸந்தி கோபாலன், பங்களூர்**
**? 'இருப்பது போம்; போவது மெய்' என்ற உண்மையை எல்லாரும் உணர்ந்துவிட்டால் நம் தேசம் எப்படி இருக்கும்?**

! அதை ஏற்கனவே உணர்ந்துவிட்டதால் தான் நம் தேசம் இப்படி இருக்கிறது! அவரவரும் இருக்கிறபோதே அனுபவித்து விடலாம் என்று அகப்பட்டதைச் சுருட்டுகிறார்கள்! மக்களின் வரிப் பணத்தில் ஜாலியாக உலகைச் சுற்றி வருகிறார்கள். லேட்டஸ்ட்: மத்திய பிரதேசத்தில் அரசு நிறுவனமான பாடப் புத்தக கார்ப்பரேஷன் உயர் அதிகாரிகள் மூவர் புத்தகம் அச்சிட இயந்திரம் வாங்க மேல் நாடுகளுக்குச் சுற்றுப் பயணம் மேற்கொண்டது. லட்சக் கணக்கில் செலவாகும் இந்தச் சுற்றுப் பயணத்தில் அவர்களுடன் போகாதவர் மேற்படி நிறுவனத்தின் அச்சுத்துறை நிபுணர்தான். அச்சகம்நிறுவுவதற்காகவே வேலைக்கு நியமிக்கப்பட்டவர் இவர்!

**○ லட்சுமிசிவம் சென்னை-7**
**? சன்மானம் கொடுக்காத பத்திரிகை பற்றி என்ன நினைக்கிறீர்கள்?**

! ஒரு பத்திரிகையைத் தயாரிக்க ஆகும் செலவில் சுமார் இரண்டு சதவீதம்தான் எழுத்தாளனுக்கும் ஓவியனுக்கும் போகிறது. அதைப் போய் இல்லை என்று சொல்வது ரொம்ப அநீதி. ரகசியம் என்ன வெனில் பேப்பர் இங்க் போன்றவைக்குப் பணம் தரவில்லையானால் அடுத்த இதழ் வெளிவராது. ஆனால் அப்பாவி எழுத்தாளனுக்குத் தரவில்லையானாலும் அடுத்த இதழ் வெளிவரும்.

★ ரூ. 10 பரிசு பெறுபவர்

தென்னூர் செல்வன்
18, மூலைக்கொல்லைத் தெரு,
தென்னூர், திருச்சி-620.017


வைரமுத்து


கருணாநிதி


எம்.ஜி.ஆர்.


சாவி



'விமல்' என்று இன்று பிரசித்தமாயுள்ள கம்பெனி சென்ற ஆண்டு 400 கோடி ரூபாய் விற்பனையை எட்டிப் பிடித்திருக்கிறது. 2,80,000 சதுர மீட்டர் நிலப் பரப்பில் ரிலையன்ஸ் டெக்ஸ்டைல்ஸ் இந்தியாவின் மிகப் பிரும்மாண்டமான துணி ஆலையாக 7500 பேர்களுக்கு வேலை வாய்ப்புத் தருகிறது.

அமெரிக்காவில் உள்ள டூபாண்ட் நிறுவனத் தொழில் கூட்டுறவோடு 10,000 டன் பாலியெஸ்டர் மெல்லிழைகள் தயாரிக்கிறது. இந்த ஆலையைப் பகுதி பகுதியாகக் கால் கடுக்கச் சுற்றி வந்தால் பாலியெஸ்டர். நூலிலிருந்து ஆடைகள் தயாரிக்கும் விதத்தைத் தெரிந்து கொண்டு விடலாம். வருஷத்துக்குப் பத்தாயிரத்துக்கு மேற்பட்ட புதிய டிசைன்களை 250 ஓவியக்கலைஞர்கள் அல்லும் பகலும் பாடுபட்டுத் தயாரித்துத் தருகிறார்கள்.

விமல் கம்பெனியின் மானேஜிங் டைரக்டரிடம் அவருடைய வெற்றிக்குக் காரணம் வினவியபோது சொன்னார்: ''நாங்கள் சிறிய நஷ்டங்களைப் பொருட்படுத்துவதில்லை. பெரிய லாபங்களில் குறியாக இருக்கிறோம்'' என்று. இந்தத் தத்துவம் அவர்கள் வரை பெரும் பயனளித்துத்தான் இருக்கிறது.

● ● ●

● குஜராத்தின் உள்ளடங்கிய கிராமங்களில் தினசரித் தேவைப் பொருட்களை 'நடமாடும் நியாய விலைக் கடை' விநியோகிக்கிறது. கிராமத்தின் வீதிகளில் வேன்கள் வந்து நின்று அத்தியாவசியப் பொருட்களை விற்கின்றன. உதாரணமாக சபர்கந்தா மாவட்டத்தில் மட்டும் 94 கிராமங்களைச் சேர்ந்த 74,000 மக்கள் இந்த நடமாடும் நியாய விலைக் கடை மூலம் பயனடைகின்றனர்.

ஜுனகாத்துக்கு அருகில் உள்ள மலைக் கல்வெட்டில் அசோக சக்கரவர்த்தியின் பிரசித்தமான போர்நிறுத்தப் பிரகடனம் நம்மைச் சரித்திர காலத்துக்கு இட்டுச் செல்கிறது. சமீபத்திய சரித்திரத்துக்கு வந்தால் ஜுனகாத் நவாப் 1947ல் பாகிஸ்தானோடு இணைய முற்பட்டதும் குஜராத் மக்கள் புரட்சி செய்து இந்தியாவோடு இணைந்ததும் முக்கியமானவை.

தமிழ் நாட்டில் கோவை துணி ஆலைகளுக்குப் புகழ் பெற்றது போல் குஜராத்தில் அஹமதாபாத். அஹமதாபாத்திலேயே கிட்டத்தட்ட எழுபதுக்கு மேற்பட்ட துணி ஆலைகள் உள்ளன! அஹமதாபாத்தில் முதல் முதலில் ஒரு துணி ஆலையை நிறுவி 125 ஆண்டுகள் ஆகிவிட்டன. இன்று அஹமதாபாத் மில்களில் 1,25,000 பேர்களுக்கு வேலை வாய்ப்பு. இந்திய உற்பத்தியில் 25 சதவிகித ஆடைகள் அஹமதாபாத்தில்தான் தயாராகின்றன.

''பட்டான் பட்டோலா'' – தின்பண்டம் அல்ல! இதுதான் குஜராத்தில் வசதி மிக்க பெண்மணிகள் விசேஷ நிகழ்ச்சிகளின்போது அணியும் பட்டாடை. இந்தப் புடவை இரட்டைத் துணியோ என்ற ஐயத்தை ஏற்படுத்தும். உலகத்திலேயே இவ்வகைத் துணியை நெய்ய மூன்றே தறிகள்தான் உள்ளன. இந்தக் கைத்தறி முறை இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன் காஞ்சிபுரத்திலிருந்துதான் வடக்கே போயிருக்கிறது! 'திருமணத்துக்கு ஒரு புடவை நெய்ய ஒரு மாதமாகும்'. விலை ரூ. 2500லிருந்து 6000 ரூபாய்வரை!

ஆதி நாளிலிருந்து நெசவுக் கலை வளர்ந்த விதத்தை அஹமதாபாத்தில் காலிகோ மியூஸியத்தில் விரிவாகக் காணலாம். பல்வேறு ரகத் துணி தவிர பழங்காலத்தில் பயன்படுத்தப்பட்ட தறிகளும் கண்காட்சியில் உள்ளன.

# பாரம்பரிய அடித்தளத்தில் புகழ் மாளிகை

# மணியான காஸெட்!

ஆதி சங்கரர் அருளியுள்ள சௌந்தர்ய லஹரியைக் கிட்டத்தட்ட முப்பதுக்கும் மேற் பட்ட ராகங்களைக் கொண்டு ராகமாலிகை யாக மணி கிருஷ்ணசாமி பாடின காஸெட் ஆஸ்திக சமாஜத்தில் வெளியிடப்பட்டது. முதல் காஸெட்டைப் பெற்றுக் கொண்டவர் திருமதி டி. கே. பட்டம்மாள். வெளியிட்ட திரு சி. சுப்பிரமணியம் சொன்னார்: ''மணி கிருஷ்ணசாமியின் பாட்டு இதயத்தைத் தொடும் ரகத்தைச் சேர்ந்தது.''

''சம்பிரதாயம் தவறாது பாடுபவர்'' என்று பாராட்டு வழங்கின டி. கே. பட்டம்மாள், ''மணி கிருஷ்ணசாமி, எங்கள் ஊரான காஞ்சீபுரத்தைச் சேர்ந்தவர்'' என்று பெருமைப்பட்டுக் கொண்டார்.

''நம் இந்திய நாட்டின் எல்லாக் கலைகளுமே வாழ்க்கையை மேம்படுத்துவதற்கே ஏற்பட்டவை. மனத்தில் சஞ்சலம் எழும் போதெல்லாம் இந்த சௌந்தர்ய லஹரி சுலோகங்கள் அமைதிப்படுத்தும்'' என்றார் பிரேமா பாண்டுரங்கன்.

விழாவில் குறிப்பிட வேண்டிய ஓர் அம்சம்: சி. எஸ். வேண்டுகோளுக்கு இணங்கி எல்லாரும் 'ரத்தினச் சுருக்க'மாகப் பேசியது.

ஒரு குறை: காஸெட்டின் ஒரு பகுதியைக் கூட ஒலிபரப்பாதது.

—தமயந்தி



## குடிநீர்

குடிநீர் வேண்டுமென
இறைவ னுக்கு
அனுப்பப் பட்ட
கோரிக்கை மனுவில்
யாரோ 'நீரை'
அழித்திருக் கிறார்கள்
அதனால்தான் என்னவோ
குடிமட்டும்
வற்றாமல் கிடைக்கிறது!

—இமயபாரதி




ஜுனகாத் தர்பார் ஹால் மியூசியம் சரித்திரப் பிரியர்கள் விரும்பிப் பார்க்கும் இடம். மியூசியத்தின் காப்பாளர் 1920-47ல் இருந்த நவாப் பல்வகை ஜாதி நாய்களைப் பிரியத்தோடு வளர்த்ததையும் 'நாய்க் கல்யாணம்' அவர் தடபுடலாக நடத்தியதையும் விவரிக்கிறார்!

• • •

• ஒட்டக வண்டிகளில் குஜராத்திக் குடும்பங்கள் பயணமாவது கண்ணுக்கினிய காட்சி. குஜராத்தின் நாடோடிக் கலைகள், ஓவியம், மணிகள் கோப்பது, எம்பிராய்டரி. அஹமதாபாத்தில் ஹரிஜனப்பெண்கள் தயாரிப்பது கோயில் திரைகள். இதில் தூர்க்கை மற்ற தேவதைகள் புராண இதிகாசக் காட்சிகள் இடம் பெற்றிருக்கும். 'குஜராத்தியர் மகர சங்கராந்தியைக்கோலாகலமாகக் கொண்டாடுவர். இளைஞரும், முதியோரும் மொட்டை மாடிகளில் நின்று காற்றாடி பறக்க விடுவார்கள். 'பாதர் நிருத்யா' என்ற நாடோடி நடனம் பிரசித்தி. படகோட்டியின் இன்னிசையுடன் கூடிய அசைவுகளும், கடல் அலைகளின் அசைவுகளும் ஓசைகளும் இந்த நடனத்தில் பிரதிபலித்துக் காட்டப்படும்.

புராதனக் கலைகளைப் போற்றுவதுடன், நவீன முன்னேற்றங்களுக்கும் வழிவகுத்து வருகிற குஜராத் பழமைக்கும் புதுமைக்கும் பாலமாக அமைந்துள்ளது.

-பி. எஸ். எம்.

○ ஜகதீஷ் டெக்ஸ்டைல்ஸில் வண்ணப் புடவை உருவாகிறது.



# கொடைக்கானல்

**கே.ஆர்.**

**கோ**டை விடுமுறையைத் தவிர்த்துக் கூட்டம் அதிகமில்லாத மாதத்தில் போவது தான் எனக்குப் பிடிக்கும். அதிகாலை நேரத்தில் ஏரியிலிருந்து ஆவி கிளம்பி வானை எட்ட முயன்று கரைந்து மறைகிறது; காட்டிலாகா அதிகாரி பிரயண்ட் வெகு காலத்துக்கு முன் உருவாக்கிய பூங்காவில் ரோஜாச் செடிகள் பூத்துக் குலுங்க ஏப்ரல் மாதத்துக்குக் காத்திருக்கின்றன. பேரி, பிளம் மரங்கள் இலை-யின்றி தெரியாதபடிக்கு வெள்ளை நட்சத்திரப் பூக்களால் அலங்கரிக்கப்பெற்றுள்ளன; 100 ஆண்டுகளுக்கு முன்னால் கோக்கர் பாதிரியார் நடந்த பாதை அப்படியே இருக்கிறது; அண்ணாதுரை நேருவைச் சுட்டிக் காட்டிய படி கால் கடுக்க நிற்கிறார்... என்ன புதுசு?

பவர் கட் புதுசு. தேவைப்படுகிற மாலை வேளையில் 7-30க்கு அணைத்தால் பத்தரை மணிக்குத் தூங்கப் போகும்போது விளக்குகள் பளிச்சென்று எரிகின்றன! சீஸனில் தண்ணீர் தட்டுப்பாட்டைத் தவிர்க்க இப்போதே ஒரு நாள் விட்டு ஒரு நாள் தண்ணீர் சப்ளை. இலங்கையிலிருந்து வந்து லேடி ராமநாதன் அமைத்த குறிஞ்சி ஆண்டவர் கோயில், பின்னால் பழனி தேவஸ்தானத்தின் பாதுகாப்புக்கு உட்பட்டு இப்போது புதிதாக வெளி மண்டபத்துடன் பொலிவு பெற்றுள்ளது. இங்கிலீஷ் கிளப்பில் ஒரு அசெம்பிளி ஹால். டி. வி. எஸ். குரூப்பில் ஏரிப் பக்கம் பங்களாக்கள். 'கொடை பாலிடெக்னிக்', சேர வருபவர்களின் ''நன் கொடை''களைப் பெற்று வளர்ந்து வருகிறது. நரிப்பிகள் கூட்டம் கூட்டமாய் ஏரிக் கரையில் அமர்ந்து 'பங்கி' அடிக்கின்றனர். தூசி மிக்க பஜார் தெருவில் திருச்செந்தூர் தேர்தல் முடிவு பற்றிக் காரசாரமாய் விவாதம்... இவைதாம் புதுசு.

பெரியகுளத்திலிருந்து ஆதி நாளில் லெவிஞ் துரை டோலியில் பயணப்பட்டு வந்து கொடைக்கானல் ஏரி அமைத்து, அபிவிருத்திகளைச் செய்த பிறகு பிரிட்டிஷ் ஆட்சியில் சில முன்னேற்றங்கள். சுதந்திரம் வந்த பிறகு இருக்கிறதைப் பாதுகாப்பது தவிர, கோடை விழா வருஷா வருஷம் கொண்டாடுவது தவிர, ஒன்றன் பின் ஒன்றாய் வந்த பல தமிழக அரசுகள் ஏதும் செய்யவில்லை. லெவிஞ்சுக்கு நன்றி கூறி எழுப்பப்பட்டுள்ள ஞாபகச் சின்னத்தைத் துடைத்து வைத்துக் கொள்ளக்கூட நமக்குத் தெரியவில்லை. அதில் பொறித்துள்ள வாசகத்தைப் படிக்கத் தொல் பொருள் ஆய்வாளர் நாகசாமிதான் வர வேண்டும்!

1914ல் 3500 ஜனத் தொகைக்கு குடிநீர் வழங்க ஒரு நீர்த் தேக்கம் உருவாயிற்று. 2.5 மிலியன் கன அடி. இப்போது ஜனத் தொகை 21000. சுற்றுலா வருகிறவர்கள் போகிறவர்கள் 9000. பழைய நீர்த் தேக்கம் போதுமா? 3.6 மிலியன் கன அடி நீர் தேக்க 1976ல் திட்டமிடப்பட்டது. அப்போது மதிப்பீடு 30 லட்சம். ஆனால் உடனே வேலை தொடங்கலாமோ? தாமதித்தால் தானே இன்று 80 லட்சம் செலவுக்கு மறு திட்டம் போடலாம்! சென்ற ஆண்டு வேலை தொடங்கிச் சாலை அமைத்து, பம்பார் ஆறு குறுக்கே அணைக்கு அஸ்திவாரம் போட மண் வெட்டினார்கள்.

அந்த இடத்தைப் பார்க்க நண்பர் மோட்டார் சைக்கிளில் அழைத்துப் போனார். மலைப் பாதையில் புல்லெட்டில் பிலியனில் அமர்ந்து போயிருக்கிறீர்களா? மலைகள் பள்ளத்தாக்குகள் மீதாகப் பறக்கும் சுதந்திர அனுபவம்; கார் பஸ்ஸில் போனால்சிறைப்பட்ட உணர்ச்சி! மோட்டார் சைக்கிளை நாமே ஓட்டினால் பாதையில் கவனம். ஆனால் பிலியன் ரைட்.. பரமானந்தம்!

அணை கட்ட அஸ்திவாரத்துக்கு மண் தோண்டப்பட்ட இடம். ஆற்றின் இரு பக்கமும் அதள பாதாளமாக 'ஆ' வென்று வாயைப் பிளந்து கொண்டிருக்கிறது. ஒரு நாளைக்கு 250 பேர்; 8 மாதங்கள் வேலை செய்த இடம் இன்று வெறிச்சோடிக் கிடக்கிறது. பத்து லட்சம் செலவழித்த பிறகு வேலை பாதியில் நின்று விட்டிருக்கிறது. பாறை தட்டுப்படும்வரை மண் தோண்டி எடுத்து விட்டார்கள். இனி பாறையில் துளைகள் செய்து உள்ளே இருக்கக் கூடிய வெற்றிடங்களை அதிக அழுத்தத்தில் காங்கிரீட்டால் நிரப்பி, பிறகு பலமான அஸ்திவாரமிட்டு மேலே அணை எழுப்ப வேண்டும். ஃபண்ட்ஸ் இல்லையாம்! கைவிரித்து விட்டது அரசு. சத்துணவுத் திட்டம் ஆரம்பித்தாலும் ஆரம்பித்தார்கள், —வேறு எதற்குமே 'ஃபண்ட்ஸ் இல்லை' பல்லவியைத்தான் கேட்க முடிகிறது!

Printed by V. Murali and Published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Ltd. at the Bharathan Press, Race Course Road Guindy, Madras-600032. (Phone: 431543)

Assistant Editor: P. S. Mani

Editor: K. Rajendran


ஃபேன்களுக்கு புகழ்பெற்ற
3 பெயர்கள் உண்டு,
அவற்றில் தனித் தரமுள்ள
ஃபேன் ஒன்று
அதன் பெயர் கேதான்.
புதிய கேதான் பிரீமியம் தனித்தரமுள்ள ஃபேன். அது ஃபேன் தொழில் நுட்பத்தில் வியப்பூட்டும் தடைவென்ற சாதனை—அதனை, கேதான் ஆய்வு மற்றும் அபிவிருத்திப் பிரிவு வல்லுனர்கள் மட்டுமே அடைந்திட முடியும்.
ஆகவே, இதர ஃபேன்கள் வழங்கிடாத தனிச்சிறப்பம்சங்களை கொண்டுள்ளது அது. 30% மின்சக்தி செலவு குறைவாகச் செலவாகும் ஃபேன் அது மட்டுமே. அதாவது மின் கட்டணத்தில் 10 ரூபாய் மிச்சம்... மாதாமாதம்...
அதே வேகத்தில், 10% அதிக காற்று வீச்சு வழங்குகிறது.
அது மட்டுமே ஐஎஸ்ஐ மார்க்குடன் கூடிய ஃபேன் ஆகும்.
கேதான்
தனித் தரமுள்ள ஃபேன்